# புகழ் மண்டபம்





மன்னர் துரைசிங்கம்
நினைவுக் கல்லூரி வெளியீடு

மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்

டாக்டர் மு. வரதராசனுர் அவர்களின்

# அணிந்துரை

சீர்த்தி மிக்க சிவகங் கைக்கண்
ஏத்துறு கல்லூரி எழிலுற அமைத்துத்
துரைசிங் கப்பெயர் துலக்கிய மன்னர்தம்
அரும்புகழ் விளங்க அணிநயம் இலங்கப்
பெரும்புகழ் மண்டபம் பெற்றியின் புனைந்தனர்
அன்பும் கொடையும் கல்வியும் வீரமும்
மன்பெருந் தூண்களாய் மாண்புறு தலைமையொடு
சிற்பிகள் இயற்றினர் சிறப்புறு கவிதைகள்
கவிதை மண்டபம் கவினுறு நூலாய்ச்
செந்தமிழ் வளத்தொடு தந்தனர் அறிஞர்
நன்னர் நெஞ்சின் தமிழகம்-
இன்ன நன் முயற்சியை ஏற்றிடும் மகிழ்ந்தே!

மு. வரதராசன்

# துதி

சித்திரத்தில் தீட்டிச் சிலைசெய்து கும்பிட்டுப்
புத்தகத்தில் போற்றிப் புகழ்ந்திடுவோம்—இத்தரையில்
சண்முகமாம் மாமன்னர் தன்னேரில் லாக்கொடையை
எண்டிசையோர் ஏத்த இனிது.

—பேராசிரியர். தி. இராமாநுசன்



அறம் வளர்த்த அண்ணல்

**சண்முக மன்னார்**

# சண்முக மன்னர்

## வாழ்க்கைக் குறிப்புரை

வற்ருத ஆறில்லாத ஊர் இருக்கலாம்; வரலாறில்லாத ஊர் இருக்கக் கூடாது.

சிவகங்கை வரலாறுள்ள ஊர்;

வீர வரலாறு படைத்துள்ள ஊர்.

சிவகங்கை வரலாறு பொன்னெழுத்துக்களால் தொடங்கும் காலம், மன்னர் சண்முகராசாவின் காலம்.

அவர், கௌரி வல்லப மன்னர் மரபில் கவின் முத்தாகத் தோன்றினர்.

11—3—1925— அவர் தோன்றிய நாள்; கல்வி, கலை, நாகரிகம் முதலிய நல்ல வித்துக்களை சிவகங்கை மண்ணில் ஊன்றிய நாள்.

அவரது நடை வண்டிப் பருவம், கொழுந்துகள் நிறைந்த மாமரம் போல் காட்சியளித்தது; அவர் பிள்ளைத் தமிழின் தலைவரைப் போல் விளங்கினர்.

அவரது குதிரையேற்றப் பருவம், பூக்கள் நிறைந்த மாமரம் போல் கண்களைக் கவர்ந்தது; அவர் உலா இலக்கியத்தின் உன்னத நாயகர் போல் திகழ்ந்தார்.

மன்னர் தொடக்கக் கல்வியைத் தம் தந்தையார் நிறுவிய சிவகங்கை அரசர் உயர் நிலைப்பள்ளியிலும் உயர் கல்வியைச் பின்னஞ் சிறு இலங்கைத் தீவிலும் கற்றுத் தேர்ந்தார்.

1939-இல் அன்னையாரை இழந்தார்; புயலில் சிக்கிய கலமானார்.

1940-இல் தாயுமானவரான தம் தந்தையைப் பறிகொடுத்தார்; கவிழ்ந்த கலமானார்.

அப்போது, அவருக்குப் பதினொன்கு வயது; ஆதலால் சிவகங்கை சில ஆண்டுகள் திவான் ஆட்சியைச் சந்திக்க நேர்ந்தது.

நாட்கள் நகர்ந்தன.

1940 ஆம் ஆண்டில் மன்னர் மணிமுடிசூடினார்; மக்கள் மகிழ்ச்சிப்பண் பாடினர்.

சிவகங்கையைப் புகழ்க் கோட்டையாக்கக் கருதிய மன்னர் புதுக்கோட்டை உறவையும் பெற்றார்; புதுக்கோட்டை மன்னரின் இளைய சகோதரியைத் த்ம் வாழ்க்கைத் துணையாகப் பெற்றார்.

இருவரும் அறமும் பொருளும் இணைந்ததைப் போல் ஒன்ருனூர்; நன்ருனூர்.

1946—மற்றுமொரு விதத்தில் மன்னர் வரலாற்றில் மறக்க முடியாத ஆண்டு. அண்ணல் காந்தியாரின் ஆணைக் கிணங்கித் "தீண்டாமை வேண்டாமை" என்ருர். அரிசனம் என்று தாழ்த்தப்பட்டோர் ஆண்டவன் தரிசனம் காண ஆலயக் கதவுகளைத் திறந்து விட்டார்; எண்ணற்ருேர் கண்களைத் திறந்து விட்டார்.

1947—இந்தியத் துணைக்கண்டம் விடுதலை பெற்ற ஆண்டு, இந்த ஆண்டில்தான் அறியாமைத் தளையிலிருந்து மக்கள் விடுதலை பெற 'மன்னர் துரைசிங்கம் நினைவுக் கல்லூரி'யை நிறுவினூர்.

இடைக்காலத்தில், பொய்கைகள், பூங்காக்கள், கோயில்கள், பள்ளிகள் பலவற்றைத் தோற்றுவித்தார். அவர் உயர் குணங்களால் சிவகங்கை அலங்கரிக்கப்பட்டது.

1948-இல் சிவகங்கைச் சீமை மன்னர், சீமைப் பயணம் மேற்கொண்டார்.

அப்போது, இன்னும் பதினைந்து ஆண்டுகளில் அவர் இறுதிப் பயணம் மேற்கொள்ளுவார் என்று யாருக்குத் தெரியும் ?

11—3—1963 அன்று, மன்னர் தம் உயிர்ப்பயணத்தை முடித்துக் கொண்டார்.

அவர் பிறந்த நாளிலேயே (11—3—1925) மறைந்தார். இரண்டு நாட்களும் ஒன்றாய் அமைந்ததற்குச் சீரிய உட்கருத்து உண்டு என்று மன்னர் வரலாற்றை எழுதிய பேராசிரியர் இ. இராமாநுசனார் கருதுகிறார் ; "பூதவுடல் மறையும் நாளிலேயே அவர் புகழுடல் கொள்ளுகிறார் என்றே பொருள்" என்கிறார்.

நேற்றிருந்தவர் இன்றில்லை ; இன்றிருப்பவர் நாளை இருப்பார் என்ற உறுதியில்லை. நேற்று, இன்று, நாளை என்று என்றும் இருப்பவர் ஒரு சிலர் ; அந்தச் சிலருள் மன்னர் சண்முகராசா ஒருவர்.

# முன்னுரை

அப்போது அல்லாமா இக்பால் ஓர் அரும்பு.

ஒரு நாள் வகுப்புக்குத் தாமதமாக வந்தார்; அறைக்குள் கொஞ்சம் தயங்கி நுழைந்தார்.

"இக்பால், ஏன் இவ்வளவு தாமதம்?" என்று கேட்டார் ஆசிரியர்.

"இக்பால் எப்போதுமே தாமதமாகத்தான் வரும்" என்று அமைதியாக பதில் சொன்னார் இக்பால்.

பதிலைக் கேட்ட ஆசிரியர் 'இந்த வயதில் இவ்வளவு அறிவுக்கூர்மையா' என்று வியந்தார்.

'இக்பால்' என்னும் உருதுச் சொல்லுக்குப் 'புகழ்' என்று பொருள் என்பதை அறிந்த எவருக்கும் வியப்பு ஏற்படத்தான் செய்யும்.

இக்பால் சொன்னதைப் போல் புகழ் காலங் கடந்துதான் வரும்; ஆனால் காலத்தைக் கடந்து நிற்கும்.

பெரும்பாலும் இறந்த பிறகே எந்த மனிதனின் உண்மையான புகழையும் கண்டு கொள்ள முடிகிறது. இருக்கும் போது பாரதியைக் கவிஞன் என்று ஏற்க மறுத்தவர்கள் அவன் இறந்த பிறகு மாகவிஞன் என்று புகழ்ந்து மணிமண்டபம் கட்டவில்லையா?

இதை உணர்ந்துதான் வள்ளுவர், ஒருவன் இறந்த பிறகு எஞ்சியிருக்கும் புகழை "இசை என்னும் எச்சம்" என்றார்.

* * *

புகழ் மண்டபத்தை அடையக் கல்வி, வீரம் எனப் பல வழிகள் இருக்கலாம். எனினும் ஈகையே தலைவாயிலாய் விளங்குகிறது.

"ஈதல் இசைபட வாழ்தல்" என்றார் வள்ளுவரும். இதற்கு விளக்கம் எழுத வந்த பரிமேலழகர் "இசைபட வாழ்வதற்குக் கல்வி, ஆண்மை முதலிய பிற காரணங்களும் உளவேனும் 'உணவின் பிண்டம் உண்டி முதற்று' ஆகலின் ஈதல் சிறந்தது என்பதற்கு ஞாபகமாக 'ஈதல்' என்றார்" என்கிறார்.

"வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை" என்றும் ஈகையே பேரறம் என்றும் பேசும் வள்ளுவர் வாழ்ந்த காலம், தனியுடைமைக் காலம்.

இன்று நாம்,

"எல்லார்க்கும் எல்லாம் என் றிருப்ப தான
இடம்நோக்கி நடக்கின்ற திந்த வையம்"

என்று புரட்சிக் கவிதை பாடமுடிகிறது; பல நாடுகள் பொதுவுடைமைப் பூங்காக்களாக மாறுவதைப் பார்த்து மகிழ முடிகிறது.

ஆனால் பொதுவுடைமைத் தத்துவம் அரசோச்சும் என்பதை எண்ணிப்பார்க்கவே முடியாத ஒரு காலத்தில், ஈகையையும் ஒப்புரவையும் அடிப்படையாக வைத்து வள்ளுவர் சமதரும மாளிகையை அமைத்தது செயற்கரிய செயல் அல்லவா?

நாம் சமதருமம் என்பதை அரசியல் வாதிகள் "சோசலிசம்" என்கிறார்கள். எப்போதும் 'சோசலிசம்' 'சோசலிசம்' என்று பேசுகிறார்கள். சிலர் உதட்டளவில் பேசுகிறார்கள்; மிகச் சிலர் உள்ளுணர்வோடு பேசுகிறார்கள்.

ஒரு வாழ்க்கை நூலில் — ஹெலன் கெல்லர் வாழ்க்கை நூல் என்று நினைக்கிறேன் — சொல்லப் பட்டிருப்பதைப்போல் 'காற்றிலே அலைந்தாடும் 'டை' கட்டுவது எவ்வளவு கௌரவமாகி விட்டதோ அவ்வளவு கௌரவமாகி விட்டது சொற்பொழிவாளர்களிடம் சோசலிசம்.'

போகட்டும் ... வள்ளுவர் என்ன சொல்கிறார் என்று பார்ப்போம்.

வள்ளுவர் ஏற்றத் தாழ்வை ஏற்க மாட்டார். எனினும் ஒரு நாட்டில் செல்வர் இருக்கக்கூடாது

என்று கூறவில்லை; ஆனால் அவர்கள் 'தாழ்விலாச் செல்வராய்' இருக்கவேண்டும் என்கிறார்.*

செல்வர் என்றாலே தாழ்வற்றவர், ஏற்றமுடைவர் என்று தானே எண்ணுவோம். பிறகு ஏன் 'தாழ்விலாச் செல்வர்' என்கிறார்?

"செல்வனுக்குத் தாழ்வாவது கொடாமை யாதலின் தாழ்வு இலாச் செல்வரும் சேர்வது நாடு என இன்றியமையாமை சுட்டினர்'' என்று டாக்டர் வ. சுப. மாணிக்கம் அதற்கு விளக்கம் அளிக்கிறார்.

இந்த விளக்கப்படி இருப்பவன் இல்லாதவனுக்குக் கொடுக்கவேண்டும்; ஏழ்மையை ஒழிக்கவேண்டும்; தனியுடைமை பொதுவுடைமையாய்ப் பரவ வேண்டும் என்று வள்ளுவர் வழிகாட்டினார் என்று அறிய முடிகிறது.

இப்படிப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே வள்ளுவரும் பிற புலவர்களும் பொதுவுடைமைக்கு விதை தூவினார்கள். அவ்விதை முளைவிடப் பேரரசர்களும் குறுநில மன்னர்களும் நீர் பாய்ச்சினார்கள்.

ஆம்...... தமிழரசர்கள் 'தாழ்விலாச் செல்வர்கள்'தாம்.

* * *

'லியர் மன்னன்' சேக்ஸ்பியரின் உயர்ந்த நாடகம் எனப் பாராட்டப்படுகிறது. இதில் லியர், அதிகார போதையில் பல காலம் மூழ்கியிருந்து, தம் இரண்டு பெண் மக்களின் பசப்புரைகளில் மயங்கி நாட்டை இழந்து, நாதியற்று, இருக்க இடமின்றிப் புயலில் சிக்கித் தவிக்கும்போது ஏழை உலகத்தை எண்ணிப் பார்க்கிறான். "ஆடையற்று நிற்கும் ஏழைகளே, நீங்கள் எங்கிருந்தாலும் சரி, இந்த ஈவிரக்கமற்ற புயலை எப்படித் தாங்குவீர்கள்? தலைவைத்துச் சாய வீடில்லாமல், உணவற்ற வயிற்றோடும் சாளரம் சாளரமாகத் தெரியும் கிழிந்த கந்தையோடும் இதைப் போன்ற பருவங்

---

* தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு.

களோடு போரிட்டு, எப்படி உங்களைப் பாது காத்துக்கொள்ளப் போகிறீர்கள்? ஓ, இதைப் பற்றியெல்லாம் நான் இதுவரை கவனம் செலுத் தியதில்லையே! ஆடம்பரமே, மருந்தை உட்கொள். திக்கற்றவர் நிலையில் நீயும் இருந்து பார். அவர் களுடைய துன்பத்தை நீயும் அனுபவித்துப் பார்த்தால் உன் தேவைக்கு மேலுள்ளதையெல் லாம் நீ துறந்து, அவர்களுக்குக் கொடுத்து விடுவாய்; வானமறிய அறவணன் என்று நிலை நாட்டுவாய்.'' — இவ்வாறு எல்லாவற்றையும் இழந்த பிறகு லியர் ஞான நீராடுகிறான்.

லியரைப் போல் ஏழைகளின் கன்னத்தில் பாயும் வாய்க்காலையோ இதயத்தில் பரவும் நெருப்பையோ காணாத தமிழரசர் பெரும்பாலும் இல்லை என்றே சொல்லலாம். மக்கள் அழுது கண்ணீர் வடிக்கும் அளவுக்கு — அவர்கள் வேதனை வெடிக்கும் அளவுக்கு — இங்கே ஒரு லியரோ சாரோ இருந்ததில்லை. மாருகப் பசிப்பிணி மருத் துவர்களாகவும், 'சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய' வள்ளல்களாகவும் இல்லோர் செம்மல் களாகவும் பலரும் திகழ்ந்திருக்கிறார்கள்; 'வான மறிய அறவணன் என்று' நிலைநாட்டியிருக்கி றார்கள்.

அவர்கள் வழியில் வந்தவர் நம் சண்முக மன்னர்.

* * *

சண்முக மன்னர் சாவா உடம்பெய்தியுள்ளார் என் றால் அதற்கு முதற்காரணம் தனிப்பட வறியார் பலர்க்கும் வழங்கிய அவரது வள்ளன்மையே; மற்றொரு முக்கிய காரணம் ஊருக்கும் நாட்டுக்கும் அவர் ஆற்றிய ஒப்புரவுத் தொண்டே.

அன்னசத்திரங்கள், மருத்துவமனைகள், விளையாட் டுக் கழகங்கள், பூங்காக்கள், கலைக்கூடங்கள், கல்வி நிலையங்கள் பலவற்றைத் தோற்றுவித்துச் சிவகங்கைச் சீமையைச் சிறக்கச் செய்த பெருமை சண்முக மன்னருக்கு உரியது.

1946ஆம் ஆண்டு சிவகங்கை மன்னராக முடி சூட்டப்பெற்றபோது அவர் தம் தந்தை பெயரில்

கல்லூரி ஒன்றை உருவாக்கத் திட்டமிட்டார். 1947-ஆம் ஆண்டு கல்லூரி தொடங்கியது. அடுத்த ஓரிரண்டு ஆண்டுகளில் சமீன் ஒழிப்பு ஏற்பட்டது. சண்முக மன்னர் ஆளும் உரிமையைக் கைவிட நேர்ந்தது; அப்போதும் அவர் ஏற்றிருந்த எந்த அறப்பணியையும் கைவிடவில்லை; கல்லூரியை அரசாங்கத்திடம் ஒப்படைக்கவில்லை. அதற்காக ஏதோ பெயரளவில் நடத்தினால் போதும் என்று உருகிய நாட்டை ஆண்டாரே காதரீன், அவரைப்போல் நடந்து கொள்ளவில்லை.

காதரீன் அரசியார் பொல்லாதவர்; இந்தக் காலத்து அரசியல் வாதிகளெல்லாம் அவரிடம் பிச்சை வாங்கவேண்டும். அவர் ஆண்டபோது ஏராளமான பள்ளிகளைத் திறந்தார். ஆனால் அங்குப் படிக்கவந்த மாணவர்களின் எண்ணிக்கையோ மிகமிகக் குறைவு. ஒருநாள் பள்ளிக்கூட ஆய்வாளர் அரசியாரிடம் வந்து "மக்கள் படிப்பில் ஆர்வம் காட்டுவதாகத் தெரியவில்லை" என்று புகார் செய்தார். உடனே அரசியார் "நான் எதற்காக ஐயா, இந்தப் பள்ளிகளைத் திறந்து வைத்தேன்? மாணவர்கள் படிப்பதற்கா? இல்லை. ஐரோப்பாவின் முன் நம் மானம் பறிபோக வேண்டாம் என்பதற்காகத்தான். பிள்ளைகள் எல்லாம் பள்ளிக்கூடத்திற்குப் போய் படிக்கத் தொடங்கினால், அப்புறம், நீயும் நானும் எங்கே போவது?" என்றார்.

காதரீன் அரசியாரைப்போல் விளம்பரத்திற்காக — மற்றவர்கள் மதிக்கவேண்டும் என்பதற்காகப் பள்ளிகள், கல்லூரிகள், நிறுவுவோர் பலர். சண்முக மன்னர் மட்டும் இவர்களிடமிருந்து விலகி நின்றார். எனவே தான் இன்றும் அவர், சிவகங்கைச் சீமை மக்களின் இதயங்களில் நெருங்கி நிற்கிறார்.

* * *

"ஆண்களில் அழகர் திருமால்; பெண்களில் அழகி ரம்பை; நகரங்களில் அழகானது காஞ்சி" என்று காளிதாசன் சொன்னதாக அழகிரிசாமி சொல்கிறார். காளிதாசன் காஞ்சிபுரத்தைக்

கண்டாரோ என்னவோ...மற்ற இருவரையும் கண்டிருக்க வழியில்லை. நான் காஞ்சியையும் இன்னும் பார்த்ததில்லை; எனினும் நகரங்களில் அழகானது காஞ்சி என்பதை ஏற்றுக்கொள்ளத் தடையில்லை. ஆனால் முன்னால் சொன்ன இரண்டையும் ஏற்றுக்கொள்வதற்கில்லை.

"சரி நீ என்ன சொல்கிறாய்" என்கிறீர்களா?

'பெண்களில் அழகி யார்' என்பதைப் பிறிதொரு சந்தர்ப்பத்தில் சொல்வேன். ஆண்களில் அழகர் யார் என்பதை மட்டும் இப்போது சொல்லி விடுகிறேன்.

ஆண்களில் அழகர்......... அழகானவர்......

லா. சா. ரா. வைப்போல் நானும் 'ஒரு சௌந்தர்ய உபாசகன்'

ஆண் பெண், அலைகடல், விண்வெளி, செடி கொடி, பசும்புல், பனித்துளி, பறவைத் தொகுதி இப்படி எங்கெங்கே அழகு கொலு விற்றிருக்கிறதோ அங்கங்கே நின்று வியந்து நெஞ்சால் வணங்க வேண்டியது தானே.

ஆண்களில் அழகானவர் சண்முக மன்னர்.

அவர் பொன் மேனிக் கட்டழகை எந்தச் சித்திர லேகையாலும் தீட்ட முடியாது; அவர் நெஞ்சத் தழகை எந்தக் கம்பனாலும் அவ்வளவு எளிதாக எழுதிவிட முடியாது.

எனினும் சிறந்த கவிஞர்கள் சிலர் முயன்றிருக்கிறார்கள். அந்த முயற்சியின் விளைவே இந்தப் 'புகழ் மண்டபம்.'

* * *

11–8–71–ஆம் நாட்காலையில் மன்னர் துரை சிங்கம் நினைவுக் கல்லூரி மாணவர்களும், ஆசிரியர்களும் சண்முக மன்னருக்கு அஞ்சலி செலுத்தி "திருவளர் நினைவு நாள்" கொண்டாடியபோது டாக்டர் தமிழண்ணல் தலைமையில் நான்கு கவிஞர்கள் இக்கவிதை மண்டபத்தைக் கட்டினார்கள்.

இது காலத்தால் அழியாது என்று நம்புகிறேன்.

பண்டைக் கிரேக்கத்தில் வாழ்ந்த விளையாட்டு

வீரன் பித்தியஸ் என்பவன் பிண்டார் என்னும் மாகவிஞனிடம் தான் பெற்ற வெற்றியைப் புகழ்ந்து ஒரு பாடல் புனைந்து தருமாறு வேண்டினானாம். அதற்காகக் கவிஞர் கேட்டதோ இரு நூறு 'பவுன்' பெறுமான தங்க நாணயம்.

"அவ்வளவு பணமா? அப்படியானால் அதைக் கொண்டு கோவிலில் என்னுடைய வெண்கலச் சிலை ஒன்று வைத்து விடலாமே" என்றானாம் பித்தியஸ்.

"அப்படியே செய்யும்" என்று கவிஞர் பதிலுரைத்தாராம்.

சிறிது நேரச் சிந்தனைக்குப் பிறகு பித்தியஸ் கவிஞர் கேட்ட பணத்தைத் தருவதாக ஒப்புக் கொண்டானாம்.

அதன் விளைவு......அவன் இன்று வரை வாழ்ந்து கொண்டிருக்கிறான். கவிஞரின் பாடல் அவனை வாழ வைத்துக் கொண்டிருக்கிறது.

புகழ் விரும்பிய பித்தியஸிடம் பொன் விரும்பினார் பிண்டார்.

நம் சண்முக மன்னரோ புகழ்க்காமம் கொண்டு எதையும் செய்யாதவர். எனவே பொன்னையோ பொருளையோ விரும்பாமல் நம் கவிஞர்கள் அவரைப் பாட்டுடைத் தலைவராக்கியிருக்கிறார்கள்; அவர் எப்போதும் இருப்பவர் என்பதை உலகுக்குக் காட்டியிருக்கிறார்கள்.

* * *

ஆம். மன்னர் எப்போதும் இருப்பவரே.

எனினும் அவர் உயிர் பிரிந்த உடலைக் கண்டபோது எந்த உள்ளம்தான் துயரத் தீயில் துடிக்காமல் இருந்திருக்க முடியும். இப்போதும் அவர் மறைவை எண்ணி என்னால் வருந்தாமல் இருக்க முடியவில்லை. நானாவது மன்னரின் சாவை நேரில் பார்த்தவன். கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம் நேரில் காணாதவர். எனினும் என்னைப் போலவே அவரும் உள்ளம் உருகி நிற்கிறார் என்பதை அவர் கவிதை காட்டுகிறது.

எந்த நல்ல உள்ளமும் நல்லவர்களின் சாவை அனுமதிக்காதே!

இலங்கையைச் சார்ந்த 'தினகரன்' நாளிதழில் வெளிவந்த ஒரு தொடர்கதையில் 'பத்மினி' என்னும் பாத்திரம் விரைந்து வந்த ஊர்தி ஒன்றில் அடிபட்டு உயிருக்குப் போராடும்கட்டத்தில் அன்றையப் பகுதி முடிந்திருந்தது. அன்று மாலையே அவசரத் தந்தி ஒன்று வந்தது. அதில் 'பத்மினி சாகக்கூடாது' என்றிருந்தது. தொடர்கதை வெளிவரும் போது அலுவலகத்திற்குப் பல கடிதங்கள் வரக்கூடும். எனினும் 'ஒரு வாசகனது உணர்ச்சி வேகம் தந்தி வழியாக வந்ததைக் கண்டு' தாம் வியந்து போனதாக அப்போது அந்த இதழின் ஆசிரியராக இருந்த டாக்டர் கைலாசபதி தம்முடைய 'தமிழ் நாவல் இலக்கியத்தில்' குறிப்பிட்டுள்ளார்.

நாவலில் வரும் நல்லவர்களின் சாவைக்கூடப் பொறுக்க முடியவில்லை என்றால் சண்முக மன்னரின் மறைவை யாரால் தாங்கிக்கொள்ள முடியும்? மன்னரின் உயிரைக் கவர்ந்த எமனே, எண்ணித் துணியாத தன் கருமத்தை எண்ணிக் கவலைப் படுவதாகவும், கண்ணீர் விடுவதாகவும் கவிஞர் சொ. சொ. மீ. தம் கவிதையில் படைத்துக் காட்டுகிறார்.

"பெருந்தமிழ்க் கண்ணிருந்த மிராவின்
பாட்டை
முன்னாலே கேட்டிருந்தால் கொன்றிருக்க
மாட்டேன்
முட்டாள் நான் அதை எண்ணி வாடுகிறேன்"

என்று எமன் கூறுவதாக அவர் பாடும்போது, நான் இயற்றிய 'மன்னர் நினைவில்' என்னுங் கவிதை சுட்டப்படுகிறது. இவ்வரிகளில் காந்திருக்கும் குற்றத்தைக்-கால வழுவை வெளிப் படுத்த நமக்கு ஒரு நக்கீரரா வேண்டும்?

மன்னர் மறைந்த பின்னரே 'மன்னர் நினைவில்' இயற்றப் பெற்றிருக்க முடியும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. அவ்வாறிருக்க, 'முன்னாலே கேட்டிருந்தால் கொன்றிருக்க மாட்டேன்' என்று எமன் கூறுவதாக உள்ளது அறிவுக்

குப் பொருந்தாது என்பதையும் சொல்லத் தேவையில்லை.

இது குற்றம் தான்; எனினும் இதை நாம் பெரிது படுத்துகிறேமோ? இல்லை. காரணம்......

இங்கே டி. கே. எஸ். சகோதரர்கள் நடத்திய 'ஒளவையார்' நாடகத்தில் அமைந்த ஓர் உயிருள்ள காட்சிபற்றிக் 'கல்கி' எழுதிய ஒரு கட்டுரை நினைவுக்கு வருகிறது.

ஓர் அரசர் அணிந்து கொண்டிருக்கும் பட்டு வேட்டியை ஒரு குழந்தை கேட்கிறது. ஒளவையார் அதை வாங்கிக் கொடுக்கிறார்; பிறகு ஒரு பாட்டுப் பாடுகிறார். அஃது ஆத்திசூடியாகவோ கொன்றை வேந்தனாகவோ இருக்கலாம் என்று எண்ணிவிட வேண்டாம். அது பாரதியின் பாப்பாப் பாட்டு.

"தமிழ்த் திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா"

என்னும் வரிகளை அந்தக் குழந்தைக்கு ஒளவையார் பாடிக் காட்டுகிறார்.

இக்காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த அனைவருக்கும் மெய்சிலிர்த்தது. ஒளவையார் பல நூற்றாண்டுகளுக்கு முந்தியவர், பாரதி இந்தக் காலத்தைச் சேர்ந்தவர் என்னும் உண்மை மறந்தே போய்விட்டது. அந்த அளவு அதில் அனைவரும் ஒன்றிப் போயிருந்தார்கள் என்று 'கல்கி' குறிப்பிட்டுள்ளார்.

இதே போல்தான் கவிஞர் சொ.சொ. மீ. சுந்தரம் எமன் முன்னரே 'மன்னர் நினைவில்' கவிதையைக் கேட்டிருந்தால் கொன்றிருக்கமாட்டேன் என்று வருந்துவதாகப் பாடும்போது யாரும் முரண்பாட்டையோ குற்றத்தையோ காணவில்லை.

காரணம் ...... அவர்கள் கவிதையோடு ஒன்றிப் போயிருந்தார்கள்.

* * *

ஒவ்வொரு கவிதையையும் விரிவாக விமர்சனம் செய்ய இடமில்லை.

எனினும் ஒவ்வொன்றும் ஒவ்வொருவிதத்தில் சிறப்புற்றிருப்பதைச் சொல்லித்தான் ஆகவேண்டும்.

வரலாற்றைக் கவிதைச் சுவை கலந்த உரை நடையில் எழுதும் ஆசிரியர்கள் இருக்கிறார்கள். ஆனால் கவிதையிலேயே வரலாற்றைச் சொல்லுவோர் மிகச் சிலரே. அவருள் 'கடைதிறப்பு'க் கவிஞர் முருகு சுந்தரத்துக்குச் சிறப்பான இட முண்டு. 'வீரம்' விளைந்த மண்ணான சிவகங்கைச் சீமையை ஆண்ட அரச வழியினரின் வரலாற்றை ஆற்றொழுக்கான நடையில் அவர் விளக்கிச் செல் வதும்,

*"போர்க்களத்தி லேபொருது*
*புதுப்புண்கள் மார்பிலுற*
*ஆர்த்து வருவதுதான்*
*அந்நாளில் பெருவீரம்*
*போரை ஒழித்தமைதி*
*பூணுகின்ற இந்நாளில்*
*பாரில் மடமையைப்*
*பகைத்தழித்தல் வீரமன்றோ?"*

என்று வீரத்துக்குப்புதிய விளக்கம் சொல்வதும் இங்கே குறிக்கத்தக்கன.

இன்றைய சிவகங்கைச் சீமை சிறக்க வாழும் கார்த்திகேய மன்னரைப்பற்றி

*'வரலாறு மாற்றியே தமிழனில்*
*அருச்சனை வருமாறு தந்த அப்பர்'*
*'செந்தமிழ்ப் பற்றிலே அதிகனார்......'*
*'திறமான பேச்சில் அரனை*
*முந்திய நக்கீரர்'*

என்று கவிஞர் செகநீசன் ஒப்புமை தோன்றப் பாடுவதும்

*"காந்தியின் அன்பு கரத்தால் தொட்டுத்*
*தொழுநோயாளியைத் தூக்கிக்*
*காத்தது......"*

என்னும் எடுப்பும்

*"லெனினின் அன்பு மனிதனைச் சுரண்டும்*
*புலிப்பணக் காரர்க்குச் சவக்குழி*
*செய்தது......"*

என்னும் தொடுப்பும்

"சண்முக மன்னரின் தணியா அன்பு
கண்திறக்கின்ற கல்லூரி கண்டது"

என்னும் முடிப்பும் அமையக் கவிஞர் சுந்தா ராசன் பாடுவதும் இனிக்கவில்லையா, நம் நெஞ்சைப் பிணிக்கவில்லையா?

தலைமைச் சிற்பி டாக்டர் தமிழண்ணல்,

'பத்திரிகைத் தூண் நிறுத்திக்
காகிதத்தைப்
பரப்பிவைத்து விளம்பரமாம்
மண்டபத்தை
எத்தனையோ பேரின்று கட்டுகின்றார்'

என்று சமுதாயப் போலிகளைச் சந்திக்கிழுத்துச் சாடுவதும்,

'பொலிவிருக்கும் போதினிலே உடலம்
தன்னைப்
புகழுக்கு மண்டபமாய் ஆக்கவேண்டும்'

என்று உண்மை வாழ்க்கைக்கு வழிகாட்டுவதும் இத்தனைக்கும் மகுடமாயுள்ளன.

* * *

'தொட்ட இடமெல்லாம் கண்ணில்
தட்டுப் பட்டாள்'

என்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அழகுச் செல்வியைப் போற்றுவார்.

தொட்ட இடந்தோறும் இந்நூலில் அழகுச் செல்வி—கவிதைச் செல்வி—தட்டுப் படுகிறாளா என்பதை நீங்களே கண்டு கொள்ளுங்கள்.

மீ. இராசேந்திரன்.

# நன்றியுரை

இற்றைய சிவகங்கை மன்னர் து. ச. கார்த்திகேய வேங்கடாசலபதி ராசா அவர்கள், 'வளையும் தமிழகத்தின் வாழ்வைச் சரி செய்யும்' இளைய தலைவர். பழங்காலத் தமிழ் மன்னர்களைப்போலவே ஈகைக் குணமும் இலக்கிய மனமும் படைத்தவர். 'பாட்டு மடைதிறக்கும் பக்கமெலாம் நிற்கும் அவர், தம் தந்தையாரைப் பற்றிய இக்கவியரங்கப் பாடல்களைக் கேட்டு அவற்றை ஒரு நூல் வடிவில் தமிழ் மண்ணுக்குத் தர நினைத்தார். நினைத்ததோடு, இந்நூலில் இடம் பெறும் 'மன்னர் நினைவில்' என்னும் கவிதைக்கு அறிமுகப் பாட்டொன்றும் அவரே எழுதிக் கொடுத்தார். இயல்பாகவே அவருக்கிருக்கும் கவிதை நெஞ்சத்தை இந்த அறிமுகப் பாட்டே படிப்பார்க்கு அறிமுகப் படுத்தும்.

இந்நூலைக் கல்லூரியின் சார்பில் வெளியிடக் கல்லூரி ஆட்சிக் குழுவினர்— சிறப்பாகக் கல்லூரிச்செயலர் திரு. உ. சுந்தர ராசதுரை அவர்களும் கல்லூரி முதல்வர், பேராசிரியர் உ. நா. குருமணி அவர்களும் வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொண்டார்கள். கவிஞர் ஐவரும் தங்கள் கவிதைகளை நூல் வடிவில் வெளியிடக் கனிவுடன் இசைந்தார்கள்.

எங்கள் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவரும் தமிழகத்தின் சிறந்த கவிஞருமான பேராசிரியர் மீ. இராசேந்திரன் அவர்கள் இந்நூலை அழகுறத் தொகுத்து உதவினார்கள்.
மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் இந்தப் பாட்டு நூலை அகவற் பாவால் அணிசெய்திருக்கிறார்கள்.

எங்கள் கல்லூரித் தமிழ்த்துறை ஆசிரியர்களான திருவாளர்கள் கு. செ. இராமசாமி எம். ஏ., ம. பெ. சீனிவாசன் எம். ஏ. ஆகியோர் கவிஞர்களைப் பற்றிய அறிமுகப் பாடல்களை எழுதி உதவ, திரு. ச. ஆறுமுகம் எம். ஏ. அச்சுப்படிகளைப் பார்த்துப் பிழை திருத்தியுள்ளார்.

இப்பெருமக்கள் அனைவருக்கும் வணக்கமும் நன்றியும் உரியன.

வே. திருவரங்கராசன்
(மன்னரின் நேர்முக உதவியாளர்)

# ‘புகழ் மண்டபம்’

தலைமைச் சிற்பி :

டாக்டர் இராம. தமிழண்ணல்

| சிற்பிகள் : | தூண்கள் : |
| --- | --- |
| கி. சுந்தரராசன் | அன்பு |
| சொ. சொ. மீ. சுந்தரம் | கொடை |
| அ. செகதீசன் | கல்வி |
| முருகு சுந்தரம் | வீரம் |



# தலைமைக் கவிதை

டாக்டர் இராம. தமிழண்ணல், எம். ஏ., பி. எச். டி.

# அறிமுகம்

செந்தமிழே கற்றிடுதல் சிந்தித்தல் செந்தமிழ்க்கு
வந்த பகைமாற்றி வாழ்வித்தல்—இந்த வகை
மூன்றும் உடையார்நம் முத்தமிழின் ஆண்வடிவாய்த்
தோன்றும் தமிழண்ணல்; தொன்மைநலம்—சான்ற தமிழ்
ஆய்ந்து மெலிந்த தவர்மேனி; என்றாலும்
ஓய்ந்துபோ காத தமிழ்த்தேனீ—தோய்ந்து
சுவைப்பாட்டுச் சொல்லிச் சுகம்தருவார் அன்னார்
அவைத்தலைமை நெஞ்சுக்கு அமிழ்து!

## தலைமைக் கவிதை

இராம. தமிழண்ணல்

இன்பக் கவியூற்ருய்
என்னுள்ளத் துள்ளிருந்தே
அன்பைச் சுரக்கின்ற
அம்மாவோ! — நின்னுடைய
சேயின் விளையாட்டைப்
பார்த்துச் சிரித்தருள்வாய்
தாயுள்ளம் கொண்டு
தழைத்து!

ஒன்பதுநாட் கொலுவிருந்து வந்தோர்க் கெல்லாம்
உவந்தளித்த துரைசிங்கம்! என்றும் தன்பேர்
நின்றிலங்கப் பள்ளியொன்று கண்டு நின்ற
நிகரற்ற துரைசிங்கம்! மகனர் தொண்டால்
என்றுமிந்தக் கல்லூரி வடிவில் நிற்கும்
எழிலுடைய துரைசிங்கம்! சிவகங் கைக்கண்
தன்னுடலம் சிலிர்க்கின்ற சிங்கம், தங்கத்
தமிழ்போலும் துரைசிங்கம் நினைவு போற்றி.

---

கல்லூரி நுழைவாயில் முன்னர் நின்று
கல்விபெற வருபவர்கட் கெந்த நாளும்
நல்வரவு கூறுகின்ற மன்னர் தம்மை
நாம்வணக்கம் செய்திடுவோம், " இவன்தன் தந்தை
நல்லமகன் பெற்றெடுத்தான் " என்று சொல்ல
நற்கோயில் கட்டியுளேன் காணீர் என்றே
சொல்லாமற் சொல்லுகிற மாட்சி கண்டு
தொழுதிடுவோம் ! சண்முகமா மன்னர் வாழ்க !!

தன்மகனை அவையத்தின் முன்னர் வைக்கும்
தகவொன்றை வள்ளுவனுர் எடுத்துச் சொன்னுர் !
மன்னுலக மக்களெலாம் அவையம் முந்தும்
மாபெரிய கலைக்கோயில் கண்ட தாலே
இன்னுமொரு படிமேலே மன்னர் சென்ற
இயல்பறிந்து வாழ்த்துகிறேம் ! குறட்பா வின்கண்
நின்றிலங்கு பொருளாக வாழும் இந்த
நிகரற்ற குலமன்னர் வாழ்க ! வாழ்க !!

உயர்பள்ளி கண்டிட்டார் தந்தை, நல்ல
உயர்கல்வி தருகின்ற கல்விக் கூடம்
முயன்றழகாய்க் கண்டிட்டார் மகனுர், இந்த
முறைமையிலே கொடைவளர்ச்சிப் படிகள் கண்டார்!
உயர்வுடைய காதலினுல் அகத்தில் வென்ருர்!
ஒப்பற்ற கொடைவீரப் புறமும் வென்ருர்!
மயலகற்றி ஏழைகட்கு வாழ்வு தந்தார்!
'மகராசா' இவரெனவே மகிழ வைத்தார்!!

இளங்கதிரோன் செவ்வானில் எழுதல் போலே
இளமையிலே முடிசூடி உலக ளித்தார்!
வளமார்ந்த விளையாட்டுத் துறையில் வென்று
வாகைபல சூடுகையில் காத லுக்கும்
களங்கண்டார்! மனமொன்றி மணம்மு டித்தார்!
காந்தியண்ணல் காட்டியதோர் வழிந டந்தார்!
உளமுருகி எளியவரும் கோயி லுக்குள்
உவந்துபுக வழிவகுத்தார்! புகழ்மி குத்தார்!

கலையாகும் விருந்தளித்து மக்கட் கெல்லாம்
கண்ணருளும் சண்முகமா மன்னர்! நல்ல
சிலையாகி மீராவின் நினைவில் நின்று*
நிகரற்ற கவிதந்த மன்னர்! என்றும்
அலையாகி வடிகின்ற உலக வாழ்வில்
அசையாது நிலைபெற்ற மன்னர்! நல்ல
கலைவாழும் புகழ்சேர்ந்த மண்ட பத்தின்
கருவறைவாழ் சண்முகமா மன்னர் வாழ்க!!

சண்முகநல் மன்னரது நினைவைப் போற்றிச்
சரித்திரத்தின் ஏடுதனைத் திருப்பு கின்றீர்!
பண்புதனைப் போற்றுகிற நல்ல நாளில்
பாவலரை அழைத்துவந்து புகழ்ம ணக்கும்
கண்ணனைய மண்டபத்தைக் கட்டு கின்ற
கார்த்திகே யப்பெரியோய்! † கனிந்த நெஞ்சின்
எண்ணத்தைச் செயற்படுத்தும் துரையே! ¶ அன்னார்
எழிற்கரமாம் முதல்வரே! நன் மாணுக் கர்காள்!!

---

* சண்முக மன்னர் மறைவு குறித்து மீரா இயற்றிய ''மன்னர் நினைவில்'' என்னுங் கவிதையே இங்கே குறிப்பிடப்படுவது; அஃது இந்நூலின் பிற்பகுதியாக அமைந்துள்ளது.

† சிவகங்கை மன்னர் – கல்லூரி ஆட்சிக்குழுத் தலைவர் – து. ச. கார்த்தி கேய வேங்கடாசலபதி ராசா.

¶ கல்லூரி ஆட்சிக்குழுச் செயலர் மாப்பிள்ளை துரை என்றும் உ. சுந்தரராசதுரை.

சொல்லடுக்கி இசைதொடுத்துச் சீர்வ குத்து
தூயதமிழ் மண்டபத்தைக் கட்டு தற்குக்
கல்லெழுது சிற்பியென வந்தி ருக்கும்
கவிஞர்களே! குட்டுவனூர் இமயம் சென்று
வில்லெழுதிக் கொண்டுவரு கல்லின் கோயில்
விளக்கமுற இளங்கோவின் நெஞ்சை யள்ளும்
சொல்லழகுக் காப்பியமாம் மண்ட பத்தின்
சுடர்வீசும் புகழன்றோ நிலைத்த திங்கே!

பத்திரிகைத் தூண்நிறுத்திக் காகி தத்தைப்
பரப்பிவைத்து விளம்பரமாம் மண்ட பத்தை
எத்தனையோ பேரின்று கட்டு கின்றார்!
எறிகாற்றில் மண்டபமே பறக்கக் காண்பார்!
சித்திரத்தில் தம்புகழைத் தாமே தீட்டும்
செயல்வீரர் பலருள்ளார்! மாலை மற்றும்
பத்திரமும் வரவேற்க முன்ன னுப்பிப்
பக்குவமாய்ப் பின்னர்வரும் தலைவர் உள்ளார்!

கோயிலுக்கு விளக்கிடுவார்! மின்வி ளக்கில்
கொடையாளி பெயரெழுதி ஒளிம றைப்பார்!
ஆயிரத்தைச் செலவழித்து விளம்ப ரத்தால்
அரைக்காசுக் கொடையதனைப் பெருக்கிக் காட்டித்
தாயனைய மற்றவர்க்குக் கொடைய ளிக்கும்
தருமவான் பலருண்டு! வைய மீதில்
வாயிருந்தால் கொடையாளன் ஆவ தற்கு
வாய்ப்புண்டு எனநினைப்போர் பலபேர் உள்ளார்!

மழையினுக்குக் குடைகேட்டால் இல்லை என்பான்
மழைபோல வழங்குகிற கொடைஞன் ஆவான்!
தழைகின்ற அன்பில்லான் கொடைச்சொற் கேட்டால்
தவித்திடுவான் குடைகிறதே செவியை என்று!
குழைகின்ற நெஞ்சத்தார் கலையி னுக்குக்
கோயிலிதை எழுப்பியவர், அன்று தொட்டு
விழைகின்ற அறம்போற்றும் சண்மு கத்து
விறல்மன்னர் புகழுக்கும் இணை தான் உண்டோ?

பொலிவிருக்கும் போதினிலே உடலம் தன்னைப்
புகழுக்கு மண்டபமாய் ஆக்க வேண்டும்!
நலிவின்றி வாழ்க்கைக்கு ஊன்று கோலாய்
நற்பண்புத் தூண்கள்பல அமைக்க வேண்டும்!
வலிமையினுல் பிறநாட்டை வென்ற தெல்லாம்
வாகையெனப் புகழ்கொண்ட தந்தக் காலம்;
பொலிவுடனே தன்னைத்தான் தியாகம் செய்து
புகழ்கொண்டு மனமகிழ்வ திந்தக் காலம்!

சிவகங்கைச் சீமையிலே கால்வைத் திட்டால்
சித்திரமும் கனல்பொங்கச் சீறி நிற்கும்!
அவமென்று வெள்ளையனை எதிர்த்து நின்ற
அடலேறு பலரிங்கே ஆண்டி ருந்தார்!
உவகையுடன் உயிர்கொடுத்து நாட்டைக் காத்த
ஊமையர்க்குத் துணையான சீமை யன்ருே?
சிவகங்கை தமிழ்வீரக் குருதி பாயும்
தென்னுட்டுக் கங்கை, உயிர் சிலிர்க்கும் கங்கை!

புறந்தனிலே நானூறு மண்டபங்கள்
புகழுக்காய் எடுத்திட்டார் நமது முன்னோர்
அறப்போர்க்குத் தமதுமகன் தனைய னுப்பும்
அன்னையரைக் காண்கின்றோம்! ஆனால் இங்கே
மறவர்குல மங்கையவர் வேலு நாச்சி
மாற்றலரைப் போர்க்களத்தில் வென்று வீழ்த்திப்
புறப்பாட்டில் புதுப்பாட்டுச் சேர்க்கக் கண்டோம்.
புல்லரித்து மனமகிழ்ந்து வாழ்த்து கின்றோம்!

அடிமையெனும் தளையுடைக்கும் வீரன் தன்னை
அளித்திட்ட சிவகங்கை வீர மண்ணில்
அடிவைத்தால் மறவர்குல மாண்பு தோன்றி
ஆண்மைமிகு பேருக்கம் வாய்க்கும் என்றே
அடிவைத்தோம் அதனுள்ளே சீர்கள் தம்மை
அடக்கிவைத்தோம்; நெஞ்சத்தை தளைத்துக்
கொண்டோம்!
தொடைமிகுந்த புகழெதிரே தோன்றக் கண்டு
தொழுகின்றோம் அனைவருக்கும் வணக்கம்; நன்றி!

# அறிமுகம்

இந்திர ராசன் பெற்ற
    இன்பத்தைச் சொல்லால் நல்கும்
மந்திர ராசன்; பாட்டில்
    மயக்கிடும் வித்தை கற்ற
தந்திர ராசன்; என்றும்
    தம்—திறம் ஒன்றால் நிற்கும்
சுந்தர ராசன் என்னும்
    சுதந்தர ராசன் வாழ்க.

# அன்பு

பி. சுந்தரராசன்

மலையினிலே மயிலிருத்தல் அழகு—செல்வ
வரவறிந்து செலவழித்தல் அழகு — ஆழி
அலையினிலே கயல்குதித்தல் அழகு—நெஞ்சில்
அஞ்சாமைப் பயிர்வளர்த்தல் அழகு-பெண்ணின்
தலையினிலே மலர்வைத்தல் அழகு—மனிதத்
தன்மையுடன் அன்புவைத்தல் அழகு-அண்ணல்
தலைவரென வீற்றிருத்தல் அழகு—அவரைத்
தலைவணக்கம் செய்வதுபே ரழகு.

(வேறு)

மதுராம்பாள் * பெற்ற
மருக்கொழுந்தே! சிவகங்கைப்
பதிகொண்ட சீதனமே!
பாண்டித் துரைபுகழைக்
கூறும் தமிழுக்குக்
கோவிலிலே இடம் கொடுத்த
நீறு திகழ்நெற்றி
நிலவே! எம் சண்முகமா

* சிவகங்கை மன்னரின் அன்னையார்,



4

மன்னர் அமைத்தபுகழ்
மண்டபத்தின் மேலேறி
விண்ணுக் கொளிகொடுக்கும்
வேங்கடா சலபதியே !
காலப் புகழனைத்தும்
கைப்பற்றி வென்றதமிழ்
வேலுநாச் சியார்வைத்த
விதைநெல்லே, வணங்குகிறேன்.

ஆண்டிருந்த சோழருக்கு
ஆராய்ச்சி மணி உண்டு ;
ஆண்டவனின் ஆலயத்தும்
அடிக்கின்ற மணி உண்டு ;
குருமணியோ* இந்தக்
கோவிலுக்கு வாய்த்தமணி
அருமணியாம் அம்மணியை
அன்புடன் நான் வணங்குகிறேன்.

---

* கல்லூரி முதல்வர் — பேராசிரியர் உ. நா. குருமணி எம். ஏ.

"'அன்பேவா" என்றென்னை
அழைத்துள்ளார்; எவளைப் போய்
'அன்பேவா' என்றழைப்பேன்?
அழகு மண மேடை
வேசமின்னும் கட்டாத
விளையாட்டுப் பிள்ளை நான்;
பாசம் பிடித்தறியாப்
பளிங்குத் தட்டாகம் நான்;
ஒன்றென்ன பத்துவில்லை
உடைப்பேனே என்றாலும்
என்னை ஒரு சிதையுமே
ஏறெடுத்துப் பார்க்கவில்லை.
விட்டெறிந்த கல்லைப்போல்
மேலேறு வேன்; ஆனால்
கிட்டரிய காதல்
கிழத்தி கிடைக்கவில்லை.
ஊடலோ கூடலோ
உவந்தளிக்க ஒருத்தியில்லை
பாடலென்ன பாடல் நான்
பாடுவதோ தெரியவில்லை.

பாகப் பிரிவினைக்கும்
பாசப் பிரிவினைக்கும்
மோகம் விதையாம்; அம்
முப்பது நாள் அன்பை நான்
பாட்டுத் தூண் ஆக்கவில்லை.
பசுமலையைப் போல் உயர்ந்த
மேட்டுக் குடி வாழ்வை
மேற் கொண்டோர் வழி வந்தும்
எளியோர்க் கெலாம் ஈந்த
எமதரசர் பேரன்பை —
ஒளிமயமாய்க் கல்லூரி
ஊன்றிவைத்த பேரன்பை —
அரிசனத்தை ஒதுக்காமல்
அனைவர்க்கும் ஆண்டவனின்
தரிசனத்தைக் காணவழி
தந்தமன்னர் பேரன்பைத்
தீட்டுகிறேன்; அவையினிலே
திரண்டுள்ளார் யாவரையும்
பூட்டியுள்ள பாட்டுவண்டி
புறப்படுமுன் வணங்குகிறேன்.

தூத்துக் குடி(க்)காரர்*
துவண்டுடலம் சோராமல்
ஏத்தும்பொய் யாவிளக்கை
ஏற்றிவைக்க வந்துள்ளார்.
நேசம் நிறைந்திருக்கும்
நெஞ்சுடைய குயில் மதுரைச்
சொசொமீ† கொடைபற்றிச்
சொல்லவந்தார்; தோன்றுதொட்டு
உருக்குதந்தே ஆயுதங்கள்
உண்டாக்கும் சேலத்து
முருகுசுந்த ரம்'வீர'
மீசை முறுக்கவந்தார்.
இந்நண்பர் எல்லாரும்
எழில்நெஞ்சர் நம்மன்னர்
அன்புவைத்த பொருட்கன்றோ
அழகேற்றிப் பாடவந்தார்?

---

* தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் அ. செகதீசன்.
† மதுரைச் சௌராட்டிரக் கல்லூரி வணிகத்துறை விரிவுரையாளர் சொ. சொ. மீ. சுந்தரம்.

‘ அன்புள்ள பெரியோரே’
என்றே அழகாக
அன்றுமுதல் மேடைப்பேச்
சாரம்பம் செய்வார்கள்.
ஆனாலும் பேச்சாளர்
அன்புக்கண் பிறர்போடும்
ஆளுயர மாலையிலும்
ஆறுமுழத் துண்டினிலும்
தோளில் புதுமலர்ச்சி
தோன்றும் விதத்தினிலே
பாடி யளிக்கின்ற
பாராட் டிதழினிலும்
ஓடிவரும்; இத்தகைய
கள்ளஉள்ளம் கொள்ளாது
நல்லஉள்ளம் கொண்டிருந்த
நம்மன்னர் அக்காலப்
பல்லவர்போற் கற்களையும்
பாடவைத்து எழுப்பியஇப்

புகழ்மண்ட பத்துள்ளே
புகுந்திருக்கும் கல்லெல்லாம்
புகலாவோ நம்மன்னர்
பூண்டிருந்த பேரன்பை ?
சிலரைப்போல் புகழ்தேடும்
செல்வாக்குப் பிரியரல்லர்.
மலர்மகுட மன்னரல்லர் ;
மணிமகுட மன்னரல்லர் ;
அன்புவைத்த மக்கள்
அகங்களையே மகுடமென
என்றைக்கும் சூடியவர் ;
எத்திசையும் நடுநடுங்கக்
குதித்தோடும் குதிரைகளின்
குலைநடுங்க ஓட்டியவர் ;
மதிப்பான கல்வியிடம்
மனங்கனிந்தே ஓடியவர் ;
மன்னரென்ற பெயருக்கே
மகத்துவத்தைத் தேடிவைத்த
சின்னத் துரைசிங்கம்
செந்தமிழை வளர்த்ததங்கம்.

---

தேன்பெற்ற ஈ மலரைச்
சிந்தித்தல் போல் இங்கே
நான்பெற்ற கல்வி அன்பால்
நயந்துகவி பாடுகிறேன்.

வீரம் கொடை கல்வி என
விதந்துரைக்கும் வள்ளுவனார்,
ஈரமெனும் அன்புடைமை
முதல் உடைமை எனத்தந்தார்.
இல்லையென்று சொல்லாத
ஈரமனப் பாரிவேள்
முல்லைக்கேன் தேர் தந்தான்?
மூண்டெழுந்த பேரன்பால்!
வானுலக மாதைப்போல்
மயக்குகிற மாமயிலுக்(கு)
ஏனொருவன் போர்வைதந்தான்?
எல்லையற்ற பேரன்பால்!
கையில் தனிச்சிலம்பும்
கண்களிலே தீப்பிழம்பும்

மெய்யிற் பொடியும்
விரிகுழலு மாகவந்து

நீதி அறியா
நெடுஞ்செழிய னேஎன்று
வாதம் புரிந்தாளே
மாட மதுரையிலே
கோவலனின் பாதி, அந்தக்
கோவலனின் அன்பன்ரே
பாவைக்கு வீரத்தைப்
பரிசாகத் தந்ததங்கே !

விருப்போடு சாவை
விரைந்தேற்றுக் கொடிகாத்த
திருப்பூர்க் குமரன் இத்
திருநாட்டின் மேல் வைத்த
அன்பன்ரே வீரத்தை
அவனுக்கு வழங்கியது ?
என்னென் பேன் ; அன்புக்கு
எதனைப் போய் ஈடென்பேன் !

( வேறு )

கொழித்துச் செழித்துக் குடும்பம் போலே
இருக்கிற மரங்களை எல்லாம் வெட்டி
வீழ்த்திய பின்னர் வீதிகள் தோறும்
மண்ணை அகழ்ந்து மரம்நடு விழாக்கள்
ஏற்பாடு செய்யும் இந்த நாட்டிலே
வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
வாடினேன் என்று வள்ளலார் பாடினர் !
என்ன காரணம்? அன்புதான் காரணம்.

உயிரை வெறுத்திவ் வுலகை வெறுத்து
நாட்டு விடுதலை நாட்டிட வேண்டி
வாஞ்சி நாதன் வஞ்சக நாதனைச்
சுட்டான் ; தன்னையே சுட்டுக் கொண்டான்;
இன்னுயிர் ஈந்தான் ; என்ன காரணம் ?
அன்னைமண் மேல்வைத்த அன்புதான் காரணம்.

அப்பர்
பறவையைப் போலே பாடித் திரிந்தும்,
ஊர்வன போலே ஊர்ஊ ராகச்
சென்றும், புல்லைச் செதுக்கியும் வாழ்ந்தார்;
கல்லொடு கடலில் கட்டித் தள்ளினும்
சூளையில் வைத்துச் சுட்டுப் பொசுக்கினும்
இனிதே ஏற்றார்; என்ன காரணம்?
அனைத்தையும் தழுவும் அன்புதான் காரணம்!

பரியை நரியாய்ப் படைத்துக் காட்டியும்,
நரியைப் பரியாய் நடத்திக் காட்டியும்,
பிட்டுக் காகப் பிரம்படி பட்டும்,
மணமிலாக் கூந்தலில் மணமுள தென்று
வாதுகள் சூதுகள் வம்புகள் எல்லாம்
ஈசனே செய்தார்! என்ன காரணம்?
அடியவர் பால்வைத்த அன்புதான் காரணம்.

அன்பு என்பது
வாழ்க்கைப் பனுவலின் பாயிர வாசகம் ;
கரும்புவில் மன்மதன் கையிருப் பாயுதம் ;
மேட்டிலும் ஏறும் வெள்ளப் பெருக்கு;
இதயக் கதவுகள் திறந்துள இடமெலாம்
நுழையும் தென்றல் ; இழையும் பூங்கொடி ;
நெஞ்சக வங்கிகள் எங்கும் செலாவணி
ஆக ஆண்டவன் அச்சிட் டளித்த
நாணயம் ; வசந்த நாயகன் தோழி ;
மாதவிப் பெண்களை கண்ணகிக் கண்களை
மா.தவிப் படைய வைக்கும் மாயமான் ;

காந்தியின் அன்பு கரத்தால் தொட்டுத்
தொழுநோ யாளியைத் தூக்கிக் காத்தது.
அறிவுப் பெட்டகம் அண்ணாவின் அன்பு
ஏழையின் சிரிப்பில் இறைவனைக் கண்டது.
லெனினின் அன்பு மனிதனைச் சுரண்டும்
புவிப்பணக் காரர்க்குச் சவக்குழி செய்தது :



குண்டடி பட்ட கென்னடி அன்பு
நிறவெறி யாளரின் நெஞ்சைச் சுட்டது;
சாஜகான் அன்பு தாஜ்மகால் ஆனது;
சண்முக மன்னரின் தணியா அன்பு
கண்திறக் கின்ற கல்லூரி கண்டது;

சிப்பிச் சிறைக்குள் சிக்கிக் கொண்ட
மழையின் அன்பு முத்தாய் விளைந்தது;
தாயின் அன்பு பாலாய்ச் சொரிந்தது;
மழலையின் அன்பு சிரிப்பாய் மலர்ந்தது;
வானத்தின் அன்பு மாரியாய்ப் பொழிந்தது;
பூமியின் அன்பு மணியாய்க் குவிந்தது;
தண்முகம் கொண்ட சண்முகர் அன்பு
காசி தொடங்கி இராமேஸ் வரம்வரை
அறநிலை யங்களைத் திறந்து வைத்தது;

மலரின் அன்பு தேன்துளி ஆனது;
வண்டின் அன்பு மகரந்த மானது;

சூரியன் அன்பு சுடரொளி யானது;
குடகின் அன்பு காவிரி யானது;
சண்முக மன்னர் தமிழ்மேல் கொண்ட
அன்பே சாகாச் சரித்திரம் ஆனது;

சின்னச் சாமியின் செந்தமிழ் அன்பு
திருச்சிச் சாலையில் தீயாய் எரிந்தது;
சிவப்பு மண்சிவ கங்கையின் அன்பு
தண்ணீர்க் கெல்லாம் தன்நிறம் தந்தது;
கார்த்தி கேயக் காவலர் அன்பு
சித்த மருத்துவச் சாலையாய்ச் சிறந்தது;
அண்ணன் மிரா அவர்களின் அன்பே
என்னைக் கவிதை எழுத வைத்தது;
அன்பு: நன்றி; அனைவர்க்கும் வணக்கமே!



# கொடை

சொ. சொ. மீ. சுந்தரம், எம். காம்.

# அறிமுகம்

எல்லாம் இருந்தென்ன? ஈயார் எனில் அவரைப்
புல்லாகத் தானிந்தப் புவிமதிக்கும்! போய்க் கேட்போர்
மலைக்கும் படிகொடுக்கும் வள்ளலெனில் அன்னவர்க்குச்
சிலைஎடுக்கும்! புகழ்மாலை சேர்க்கும்! தினம் துதிக்கும்!
சண்முகமா மன்னர் தனிக்கொடையைப் போற்றி இந்த
மண்டபத்தே பாட வருகின்றார் சொ. சொ. மீ.!
சற்றும் தளராத தமிழ்நெஞ்சம் இவர்நெஞ்சம்!
வெற்றிக் கவிதைகள் விரைந்தெழுதும் கை இவர் கை!
எற்போர் சலித்தாலும் ஈதலிலே சலியாரை
ஆற்றலுடன் சொல்வார் அறிந்து!

# கோடை

சொ. சொ. மீ. சுந்தரம்

மைநிரப்பா தெழுதுகிற பேனு; சற்றும்
மடிபெருக்கா தமுதூட்டும் உயர்ந்த தென்னை;
பைநிரம்பா விட்டாலும் பரவா யில்லை
பாநிரப்பும் தமிழ்க்கவிஞன்; எந்த நாளும்
பொய்யடையா நெஞ்சத்தான் என்று கூறிப்
புவியேத்தும் தமிழண்ணல் வணங்கு கின்றேன்.
கையுளியால் செய்யாமல் கவியால் செய்த
கனிந்தபுகழ்க் கொடைத்தூணைக் கடைக்கண்
பார்ப்பாய்.

வீற்றிருக்கும் சான்றோரே! கவிதை மாந்த
விழைந்திருக்கும் மாணவரே! வீசும் தென்றற்
காற்றடிக்கும் திசைநோக்கி வீற்றி ருக்கும்
கனிவான தங்கையரே! முதல்வ ராகி
வீற்றுள்ள குருமணியே! அவரைச் சுற்றி
விளங்குகிற ஆசிரியப் பெருங்கு லத்தீர்!
ஏற்றிடுவீர் வணக்கங்கள்; தாம தித்த
எனக்காக மன்னிப்பு நல்கு வீரே!

கலைப்பார்வை நெஞ்சத்தைக் கண்கள் காட்டும்;
கைப்பிடிக்கும் உடைவாளோ மரபைக் காட்டும்;
விலைப் பார்வை பார்க்கின்ற வீணர் தம்மை
விரட்டுகிற வீரத்தை மீசை காட்டும்;
மலைப்பேதும் இல்லாமல் உதவும் பாங்கை
மலர்ந்திருக்கும் தாமரைப்பூ வதனம் காட்டும்;
தலைப்பாகை நாடாளும் தகுதி காட்டும்;
சண்முகமா மன்னவனை நினைவு கூர்ந்தால்!

புதுக்கோட்டைச் சீமைக்கு மருகன் ஆனான்.
புகழ்க்கோட்டை மண்டபத்தில் அரசன் ஆனான்.
சதிக்கோட்டை வரைகின்ற வீணர் நெஞ்சத்
தருக்கோட்ட வளர்கின்ற தகவு பெற்றான்.
நிதிக்கோட்டை சிவகங்கை நாலு கோட்டை
நிலக்கோட்டைத் தாங்குகிற களிறு மானான்.
விதிக்கோட்டைப் புகழ்க்காலால் அழித்து வென்ற
வித்தகனை என்பாட்டில் விளக்க வந்தேன்.

காட்டிடையே சிறுமுல்லைக் கொடிப டர்ந்து
கடுவெயிலில் தடுமாறும் காட்சி கண்டே
ஓட்டிவந்த மணித்தேரை நிறுத்தி விட்டான்;
ஒளிர்கின்ற பொற்றேரில் கொடியை ஏற்றிக்
கேட்டவரும் படித்தவரும் வியந்து பாடக்
கிளைபோலக் கொடிக்குத்தேர் ஈந்து சென்றான்;
பாட்டினிலே பெரும்புலவர் கபிலர் பாடப்
பலகாலும் புகழ்பெற்றான் பாரி மன்னன்.

அன்புடைய மூதாட்டி தமிழர் பாடும்
ஔவையவள் உடன்வாழும் ஆசை யாலே
வன்புடைய பெருங்கள்வர் தமைய னுப்பி
வழிப்பறியும் செய்ததனால் ஔவை வந்து
தன்முன்னே எதுநீதி என்று கேட்கத்
தலைதாழ்த்தித் தான்செய்த செயலு ரைத்துப்
பன்மொழியால் அவள்பாடப் பெருமை யுற்றான்
பாரியெனும் பெருவள்ளல் ஏட்டில் கண்டோம்.

தனிவழியே வருந்திவரும் பாணன் துன்பம்
தனிக்கதிர்முன் பனிபோல மறைந்து போக
இனியமொழி பலகூறிப் பொருள்கொ டுத்தும்
இன்னுனென் றுரையாமல் கடமை செய்த
கனிமொழியால் அகம்புகழும் வல்வில் ஓரி
கனிவினையும் தமிழ்நூல்கள் காட்டக் கண்டோம்.
மனைவியரின் மங்கலநாண் அதனை யன்றி
மற்றதெலாம் இரவலர்க்கே ஈந்த வள்ளல்.

கானகத்துச் சிறுமயிலின் குளிரைக் கண்டு
கம்பளிபோல் தன்போர்வை எடுத்துத் தந்து
வானகத்தும் புகழ்பெற்ற பேக மன்னன்
வண்மையையும் இலக்கியங்கள் வரையக் கண்டோம்.
தேனனைய தமிழ்ப்பயிரில் களையி ருந்தால்
தெளிந்தவை நீ களைகவெனக் காரி மன்னன்
கூனல்விழும் மூதாட்டி ஔவை யார்க்குக்
கொடுத்தகளைக் கொட்டினையும் ஏடு காட்டும்.

---

நல்லமொழி முடமோசி புகழ்ந்து பாடும்
நற்கொடைஞன் ஆயினையும் ஏட்டிற் கண்டோம்.
இல்லையெனச் சொல்லாமல் அள்ளி யீந்த
எழினியையும் நள்ளியையும் காலம் போற்றிச்
சொல்லிவரும் மலையனையும் சீதக் காதித்
தோன்றலையும் குமணனையும் இந்த நாட்டில்
பல்லுலகும் புகழ்தமிழர் ஏட்டி லல்லால்
பார்த்ததில்லை ; நாம்நேரில் இன்று கண்டோம்.

நேற்றிருந்த சிவகங்கை இன்றைக் கில்லை ;
நினைக்கவொணுப் பெருமரங்கள் இன்று காணேம்.
காற்றடிக்கும் பெருங்காட்டில் இன்றே இன்பக்
கல்லூரிக் கட்டிடங்கள் நிற்கக் கண்டோம்.
வேற்றவரின் படைதடுக்கும் வரிசை போல
மிகுசான்றேர் தம்முள்ளப் பெருக்கம் போல
மாற்றலருக் கறிவூட்டும் அரண்கள் போல
வளர்ந்துவரும் கலைக்கூட வரிசை கண்டோம்.

---

அடுப்பூதும் பெண்களுக்குப்
படிப்பேன் என்றே
ஆண்களெலாம் கேட்டிருந்த
காலம் மாறி
அடுப்பூதும் பெண்களையும்
படிக்க வைக்கும்
அரும்பணியைக் கல்லூரி
வளர்க்கக் கண்டோம்.
தடுக்கின்ற நிலைமாறி
ஆண்க ளோடு
சமமாகப் பெண்கல்வி
நடக்கக் கண்டோம்.
படிக்கின்ற நெஞ்சங்கள்
எல்லாம் அந்தப்
பாராண்ட புகழ்மன்னன்
வடிவைக் கண்டோம்.

அமைவான சத்திரங்கள்
அயர்ந்தோர்க்குத் தந்தான்.
அங்கயற்கண் ணம்மைக்கும்
அறப்பணிகள் செய்தான்.
இமைகாக்கும் விழியாக்கிச்
சிவகங்கைச் சீமை
எடுத்தகலைக் கல்லூரி
தொடுத்தபுகழ் பெற்றான்.
நமையெல்லாம் காப்பாற்றக்
கல்விக்கண் தந்தான்.
நாட்டுக்கும் வீட்டுக்கும்
நலம்தேடித் தந்தான்.
எமன்வந்து கொடைகேட்டான்;
"எனக்கென்ன?" என்றான்.
எடுத்துக்கொள் எனச்சொல்லி
உயிர்தந்தான் மன்னன்.

பூவாகிப் பிஞ்சாகிக்
கனிநாடி நிற்கும்.
பொற்புடைய மாமரத்தை
எமன்வீழ்த்தி விட்டான்.
நாவாரப் புகழ்பாடி
நின்றகவிக் கூட்டம்
நடுக்கடலில் மீகாமன்
அற்றகலம் ஆகி
தேவாரம் பாடுகிற
திருவாயால் அந்தத்
தெய்வத்தின் கல்லறையில்
பாமாலை சூட்ட
மேவாத புகழ்கூவி
நிற்பவனைப் பற்றி
மீராவின் கவிமாலை*
கண்ணீரைக் கொட்டும்.

---

* 'மன்னர் நினைவில்' என்னுங் கையறு நிலைக்கவிதை.

மண்ணெடுத்துக் கொடைதந்தால்
மறைந்து போகும்.
மலரெடுத்துக் கொடைதந்தால்
வாடிப் போகும்.
பெண்ணெடுத்துக் கொள்என்று
கொடுத்தால் கூடப்
பெறுகின்ற சுகமெல்லாம்
கொஞ்ச நாள்தான்.
விண்ணளவு பொன்தரினும்
மறைந்து போகும்.
மேலான மாமன்னர்
கல்வி யென்னும்
கண்ணெடுத்துக் கொடைதந்தார்.
அதனா லன்றோ
கையெடுத்துக் கும்பிட்டுக்
கொடைஞன் என்றோம்.

கல்விமணம் தனைப்பெற்றான்
இலங்கை நாட்டில்;
கலப்புமணம் தனைச்செய்தான்
இந்த நாட்டில்;
செல்வத்தின் செருக்காலே
திரிந்தி டாமல்
தீண்டாதார்க் காலயத்தைத்
திறந்து வைத்தான்.
சொல்வதினும் செயல்பெரிதாய்
எண்ணி, மன்னர்
துரைசிங்கம் கல்லூரி
தொடங்கி வைத்தான்.
கல்வியினைக் காத்திடவே
நமது கையில்
கார்த்திகய மன்னவனைக்
கொடைகொ டுத்தான்.

இப்படியே சிலபாடல்
சண்முகமா மன்னன்
எழில்நினைவைப் பாராட்டி
எழுதிவைத்த பின்னர்
செப்பரிய தமிழாலே
இனிக்கும் இதுபோதும்
சிவகங்கை சென்றிடலாம்
என்றேநான் எண்ணி
எப்படியோ மிகவிரைவில்
வீட்டைவிட்டு வந்தேன்.
என்மீது பெரியதொரு
'கார்'வந்து மோத
இப்படியும் அப்படியும்
தடுமாறி நின்றேன்.
எனையிடித்த காரிலிருந்
திறங்கியவன் வந்தான்.

கறுப்பான திருமேனி;
காரிருளில் நல்ல
கரியப்பி ளுற்போலத்
தெரிகின்ற உருவம் ;
வெறுப்பான கண்பார்வை ;
உலகத்தை யெல்லாம்
வெருட்டுகின்ற பெருமீசை ;
கை, யானைக் கையாம்;
மறுப்பேதும் சொல்லாமல்
உயிர்விருந்தை உண்ண
வந்தவன்போல் ஒருவேகம்;
வையமெலாம் மாய்க்கும்
பொறுப்பான் வேலைக்குப்
புறப்பட்டாற் போலப்
பொலிகின்ற தோற்றத்தான்
எதிர்வந்து நின்ருன்.

"யாரையா நீ' என்றேன்;
எனைத்தெரிய வில்லை?
என்பேர்தான் எமன்என்ருன்.
நான்அயர்ந்து போனேன்.
சீரான கவிபாடச்
சிவகங்கை நோக்கிச்
செல்லுகின்ற போதா நீ
வந்திடுதல் வேண்டும்.
வார்குழலாள் ஒருத்தியினை
மனைக்குவிளக் காக்கும்
மணமுடித்து மூன்ருண்டு
நிறையவில்லை. சின்னத்
தேர் இழுக்கும் இளம்பிள்ளை
ஒருவன்தான். இந்தச்
சிறுவயதில் எனைத்தேடி
ஏன்வந்தாய் ஐயா?

காலனெனச் சொல்லுகின்ருய்;
நம்பவில்லை நெஞ்சம்;
கார்எருமை இல்லாமல்;
காரேறி வந்தாய்.
சூலத்தைப் பாசத்தைக்
கைகளிலே காணேம்.
தோற்றத்தில் நம்பிக்கை;
பிறவெல்லாம் எங்கே?
வேலையிலே இருப்பவன் நான்-
நீமுன்னர்ச் சொன்னல்
விடுமுறைக்கு விண்ணப்பம்
எழுதிவைத்து வருவேன்.
காலையிலே வந்திருந்து
கைக்கொண்டு செல்லக்
கவிஞன் நான் வரமாட்டேன்-
பாட்டெழுத வேண்டும்.

நன்ருக நீயேதான்
எமனென்று சொன்னல்
நாளைக்கு நீவாராய்
இன்றைக்கு வேண்டாம்.
பொன்ருத சீர்பெற்ற
சண்முகமா மன்னன்
புகழ்க்கொடையைத் தமிழ்பாடச்
சிவகங்கை நோக்கி
இன்றைக்குச் செல்லுகிறேன்;
இல்லையெனில் மீரா
என்னைவிட மாட்டார் ;
நீ என்னைவிட வேண்டும்.
என்றைக்கும் உன்மீது
தமிழ்பாடு கின்றேன்
இன்றைக்குப் போய்நாளை
வந்திடுவாய் என்றேன்.

என்னுரையைக் கேட்டதுமே
எமன்சிரித்துச் சொன்னுன்
ஏனப்பா பதறுகிருய்?
உன்னுயிரைக் கொள்ள
இன்றைக்கு நானிங்கே
வரவில்லை. அஞ்சேல்!
எருமையுடன் பாசமெலாம்
இவ்விடத்தில் இல்லை.
நன்ருக என்வேலை
கிழக்குவங்க மண்ணில்
நடக்கிறது பாசமெலாம்
அங்கேதான் வைத்தேன்.
இன்னும்நான் அங்கேதான்
திரும்பிடுதல் வேண்டும்
இதற்குள்ளே உன்னிடத்தில்
ஒன்றுரைக்க வந்தேன்.

சிவகங்கை செல்லுகிருய்
நீயென்று கேட்டேன்;
செய்தியொன்று நான்சொல்வேன்
நீயங்கே சொல்வாய் :
புவியிடையே பலவுயிரை
நான்பிரித்த துண்டு.
பொன்னனைய காந்திக்கும்
நான்குண்டாய் வந்தேன்;
கவிபாடும் பாரதிக்கோ
யானையின்கால் ஆனேன்;
கயத்தாற்றில் பொம்மனுக்குக்
கயிருகச் சென்றேன் ;
புவிபோற்றும் பேரறிஞர்
அண்ணுவுக் காகப்
புற்ருகி வந்ததுவும்
என்செய்கை யாகும்.

பொன்ருத புகழுடைய
பலபேரை நானே
புறப்பட்டுப் பெருவெற்றி
கண்டதெலாம் உண்டாம்.
அன்றெல்லாம் வருந்தாத
என்னெஞ்சம் ஓர்நாள்
அனற்பட்ட மெழுகேபோல்
உருகியதும் உண்டு.
நின்றிலங்கும் கல்லூரிச்
சிலைவடிவில் இன்னும்
நினைவாகி நிற்கின்ற
சண்முகமா மன்னர்
கன்றனையார் இளைஞர்க்குக்
கல்லூரி கட்டிக்
கைதூக்கி விடுகின்ற
கடமைக்கு வேந்தர்.

அன்னவரைக் கொன்றேனே
அன்றேதான் நெஞ்சில்
அனல்பட்டாற் போல்நானும்
உளம்வாடி நின்றேன்.
பின்னந்த நிகழ்ச்சியினை
மனத்திடையே எண்ணிப்
பெருந்தமிழ்க்கண் ணீருகுத்த
மீராவின் பாட்டை
முன்னாலே கேட்டிருந்தால்
கொன்றிருக்க மாட்டேன்.
முட்டாள்நான் அதையெண்ணி
வாடுகிறேன் இன்னும்
என்னாலே நிகழ்ந்தசெயல்
இனியதனை மாற்ற
என்னாலும் முடியாதால்
யானென்று செய்வேன்.

மன்னவர்கள் ஆலயத்தைக்
கொடைதந்த நாளில்
வளர்கல்விக் கூடத்தால்
கொடைதந்து நின்ற
மன்னவரை நான்பிரித்தேன்.
அவர்வாழ்நாள் தன்னை
மைந்தரெனும் கார்த்திகய
மன்னவர்க்குத் தந்தேன்.
என்னுடைய பேர்மீதில்
ஆணையிடு கின்றேன்
இன்றிருக்கும் கார்த்திகய
மன்னவரால் கல்விப்
பொன்னேட்டில் புதுப்பக்கம்
புரட்டிடநான் வைப்பேன்.
புவியிடையில் அவர்வாழ
நான்காத்து நிற்பேன்.

என்றிதனைச் சொல்லிடவே
உனைநாடி வந்தேன் ;
இதையங்கு சொல்லிடுவாய்;
நான்செல்லு கின்றேன்;
என்றுரைத்தான் பெருங்காலன்.
யான்மூச்சு விட்டேன்.
எமன்கைக்குத் தப்பியவன்
யானொருவன் தானே!
பொன்றாத புகழ்மாலை
மன்னவர்க்குச் சூட்டிப்
புறப்பட்டான் காலன்,
நான் புறப்பட்டுவந்தேன்.
இன்றுலகில் பலவள்ளல்
இருந்திடலாம் காலன்
இதயத்தை உருக்குகிற
வாழ்வினையார் பெற்றார் ?

சண்முகவேள் மாமன்னன் தனிவாழ்வு பெற்ருன்.
தமிழ்வாழும் நாளெல்லாம் அவன்வாழ்வு பெற்ருன்.
பண்முகமாய்ப் பலபுலவர் பாடுகிற பாட்டில்,
பலபேரை ஆக்குகிற கல்லூரி ஏட்டில்,
கண்மணிபோல் காக்கின்ற கார்த்திகய மன்னர்
கண்பார்வை தருகின்ற தண்கருணை நோக்கில்,
பெண்மணிகள் பாடுகிற தாலாட்டுப் பாட்டில்,
பெருமன்னன் கொடைவண்மை பிறங்கிடுதல்
கண்டோம்.

•

இத்தனையும் பெற்றகொடை மன்னனவன் வாழ்க!
ஏற்றபுகழ் மண்டபத்தில் கொடைத்தூணய் வாழ்க!
புத்தகத்தில் எந்நாளும் பொறித்தகொடை வாழ்க!
புத்(து) அகத்தை எந்நாளும் தந்தகொடை வாழ்க!
சித்தத்தில் ஊன்றுகிற சிறந்தகொடை வாழ்க!
சிறப்பாகப் பேணுகிற கார்த்திகய மன்னர்
மெய்த்தவஞ்சேர் இராசேசு வரியம்மை நோக்கால்
மிகப்பொலிந்து பல்லாண்டு பல்லாண்டு வாழ்க!

# அறிமுகம்

மேடை மீதுகவி பாடி ஆடுகையில்
வேக மிக்கநட ராசன் !
விந்தை யானபல சந்த மேறுகவி
வீசும் அருணைகிரி தாசன் !
கோடை மேகமென ஈடி லாததமிழ்
கூறும் கலையன்னை நேசன் !
கொள்கை யோடுபுகழ்க் கல்வி பாடிவரும்
கோதி லாதசெக தீசன் !

## கல்வி

அ. செகதீசன்

மிக்ககொடை நற்றமிழை
மிதிக்கவரும் பகைவர்க்குத்
தக்கபடி ஊசியிட்டுத்
தாக்கிதயம் தானறுத்துக்
கருத்துமாத் திரைநல்கிக்
காக்குமுறைக் கட்டிடும்நல்
மருத்துவரே!* நற்புலமை
வாய்த்ததமிழ் அண்ணலே!

கார்திகைக்க யாவர்க்கும்
கல்வி மழைபொழியும்
கார்த்திகேய மன்னரே!
கல்லூரித் தாளாண்மைச்
செங்கோல் பிடிக்கும்
செயலாண்மைச் சுந்தரரே!†

---

* டாக்டர் தமிழண்ணல்.
† கல்லூரி ஆட்சிக்குழுச் செயலர் திரு. உ. சுந்தரராசதுரை.

முதல்வர் எனும்சொல்லே
முடித்துப் பொருள்காட்டும்
பதிவுக் குருமணியே !
பண்பிற்(கு) உருமணியே!

விற்போர்க்கு வேண்டாத
விந்தைச் சிலைமுடித்துக்
கற்போர்க்குக் காட்டும்
கவிதைச் சிற்பிகளே !

ஆ(சு)சிரியக் கல்வி
தரும்அறிவு வேள்விசெயும்
ஆசிரியப் பெருந்தகையீர் !
ஆர்வக் கரங்கொட்டி
வான்பொட்டு மீன்கள்போல்
வார்ப்பொளிக் கண்சிமிட்டும்
தேன்சிட்டு மாணவர்காள் !
தென்பாண்டி முத்துக்காள் !

---

அன்புக் குரியோரே!
அனைவர்க்கும் என்வணக்கம்!
அன்பும் கொடையும்
அடுத்துவரும் வீரமும்
முன்பின்னாய்த் தூண்களென
மூன்றுமே நின்றிருக்க
என்றனின் கல்வி
எடுத்தபெரும் தூண்பொருட்டே
இன்று நிறுவுநர்
நினைவுவிழா என்னுமொரு
தெம்பிலே சொல்லின்
உளி,சந்தச் சுத்தியுடன்
நம்பிக்கை வைத்தேன்; இந்
நல்லபுகழ் மண்டபத்தில்
என்கல்வி பேசும்
இனி.

(வேறு)

கல்விநான்; யாவர்க்கும் கண்கள்நான்; அறியாமை
கல்லியே துலங்கி டுங்கண்
காட்சிநான்; மெய்ப்பொருட் காட்சிநான்; அறிவுவான்
காணும்மின் ஆட்சி நானே!
செல்விநான்; வாழ்கலைச் செல்விநான்; உலகெலாம்
செல்லுமொரு செல்வி நானே!
செல்லாத மடமைக்குக் கொல்லிநான்; அன்புகொடை
சேர்வீரப் பண்புக் கொத்து
மல்லிநான்; ஏவுகணை வல்லிநான்; அள்ளுமவ
மானத்தின் வில்லி நானே!
மார்ச்சு,செப் டம்பரென மாணவர்கள் போற்றுமொரு
மாதவியும் நான்; எழுந்து
சொல்லிக் கொடுக்குமொரு பள்ளியாய் வருகையில்
தள்ளுமேல் இந்தவையம்
சல்லியாய், மெல்லியாய், இல்லையாய்ப் போகநான்
கண்ணகி ஆகு வேனே!

அன்புக்கும் ஓரெல்லை உண்டுகாண் ; அதுபின்னும்
அளவின்றி வளருமாயின்
ஆசையாம் ; அளவில்பே ராசையாம் ; இராமனுல்
தசரதன் ஆன கதைதான் !
துன்பத்தைத் துடைத்திடும் கொடைமாட்சி எதுவரை?
தொல்பொருள் உள்ள வரையில் !
தொடர்ந்தொரு பழமொழி படர்ந்ததே 'தனக்குமிஞ்
சித்தானே தானம்' என்று !
பின்புநம் வீரத்தைப் பேசுவோம் : பீடுடல்
பிடிசாம்பல் ஆகும் நேரம்
பிட்டுப்பிட் டென்றுகட் டைவிட்டு விட்டுநரம்(பு)
இற்றுவிழும் கட்டத்திினில்
என்னென்றும் ஏதென்றும் கேட்குமோ வீரமே!
ஒருமையுள் கற்ற கல்வி
எழுமைஏழ் பிறப்புக்கும் வருமென்று திருக்குறள்
இழுக்குமே என்றென்றுமே !

---

(வேறு)

சென்றஇட மெல்லாமும் யாருக்குச் சிறப்பு?
சிந்தையெலாம் அள்ளுகின்ற கற்றோர்க்கென் றேதான்
நின்றஇட மெல்லாமும் சொல்லிச்சென் றாரே!
நெருங்கிவரும் உலகமெலாம் என்றனுக்குத் தானே!
வென்றஇடம் மட்டும்தான் சொந்தஇடம் வீரம்
என்பதற்கும்; எத்திசையில் சென்றாலும் எனக்கு
நன்றென்றே சோறுவரும்: இதுபுறநா னூறு!
நானடைந்த பெருமைசொல்ல வேண்டும் நா-நூறு!

முச்சங்கம் நான்கண்டேன்; முழுமை கண்டு
முத்தமிழை முறைவைத்தேன்; வரியெ ழுத்துப்
பிச்சிப்பூத் தொடுக்கின்ற அச்ச கங்கள்
பெருக அமைத்திட்டேன்; குறள்முப் பாலை
நச்சிஉல கின்வயிற்றில் வார்த்தேன்; பாம்பின்
நஞ்சினையும் நல்லமருந் தாகச் செய்தேன்;
நிச்சயதாம் பூலம்போல் உறவு சேர்ப்பேன்;
நிலஉருண்டை அழிக்கஅணு குண்டா செய்வேன்?

தலையானங் கானத்துச் செருவென் றேனைத்
தனிப்பத்துப் பாட்டுத்தேர் சுமத்தல் இன்றேல்
நிலையேதோ? ஆரியப் படைக டந்த
நெடுஞ்செழியன் ஆட்சிமுறை யெல்லாம் அந்தக்
கலைஞர் இளங் கோ இன்றேல் ஏது? முந்தைக்
கடையேழு வள்ளல்களும் குமணன் கர்ணன்
இலையென்று தீர்ந்தகொடைச் சிறப்பெல் லாமும்
இலைவைத்து நான்போட்ட பிச்சை தானே!

புலிப்பல்லைக் கொண்டுவந்தால் அன்று பெண்ணைப்
பொருத்தமென்று தந்திடுவேன் என்றார்! இன்றோ
எலிப்பெண்ணைக் கேட்டாலும், " ஆமாம், பையன்
என்னபடித் திருக்கின்றான் என்றே கேட்பார்!
சலிப்பின்றி அன்புசெய்வான் எனினும், கல்வி
சரிப்பட்டு வரவில்லை என்றால், தள்ளி
மலிவுவிலை யாக்கிடுவார்; மாப்பிள் ளையை
மாப்பிள்ளை ஆக்கிடுவார்; என்றால் தானே!

ஆதிக்க வெறிச்சண்டை வியட்நாம் வேள்வி
அனலுக்கு நறுநெய்யா நான்சொ ரிந்தேன்!
மோதியெழும் விடுதலைவங் காள தேச
முறைமைக்கு மண்ணிட்டுப் பெண்டு பிள்ளை
மிதியில்லை எனக்காளி தேச மாக்கி
மிதித்தழித்து வீரமென்று போர்வை யிட்டேன்!
சேதியிது: கல்வியுடன் சேர்ந்த வீரம்
சீராகும்; வேகம்,வி வேகம் ஆகும்!

என்னுதவி வாய்த்திருந்தால் அன்பு, நேர்மை
இன்னருளாய்ப் பெருகிவரும்; காந்தி ஆகும்!
கன்மனத்தில் ஒருசிலரை மட்டும் போற்றிக்
கண்மூடித் தனவழிபா டாற்றி டாது!
நன்றாகும் கொடையெனினும் நான்கொ டுக்கும்
நல்லறிவு போலாமோ? எனினும் கல்வி
குன்றிஇடும் கொடை,மடமே; கொல்லும் குத்தும்
கூத்தடிக்கும் பதவிக்குக் குடைபி டிக்கும்!

தாய்மொழியிற் கல்விஎனில் இன்னும் இன்னும்
தாராள மாய்வளர்வேன் ; வேலைக் காய்ச்சல்
பாய்மொழியாய் நான்படுத்துத் தூங்க மாட்டேன் !
பயிற்சியினால் பல்கலைகள் முயற்சி செய்வேன் !
சேய்மொழியாய்ப் பலமொழிகள் பெற்றுத் தந்த
செந்தமிழ்தான், செய்தவந்தான் முப்பால் செந்தேன்
வாய்மொழியாப் பொருளுண்டோ ? வாய்ப்பிருந்தால்
வையகத்தை வளைத்திடுவேன் ; எதையும் ஆள்வேன் !

இலக்கியமா ? இலக்கணமா ? எத்தும் சித்தும்
இல்லாத அரசியலா ? நாட்டை நன்றாய்க்
கலக்கிவரும் பொருளியலின் சிக்கல் தானா ?
காதலா ? கலையாத கலையா ? காற்றில்
உலக்கையிடும் ஏவுகணைப் போக்கா ? காணும்
உலகியலா ? சமுதாயத் தொண்டா ? வீழ்ந்து
தலைகைவைத் தேவணங்கும் பக்திக் கோயில்
தலைப்பாகைக் கோபுரமா ? எல்லாம் நானே !

(வேறு)

இத்தனை திறத்தினில் என்சிறப் பனைத்துமோர்
இமயமாய் விரிவதனுல்
இருப்பினில் விருப்பினில் பரப்பிடும் குறிப்பினில்
ஏற்புடைப் பணியாகச்
சித்திர விரிப்பெனத் திகழ்நெடுஞ் சாலையில்
சிதளப் பொன்மாலை
செக்கரின் திங்களை வைத்துப் படித்திடும்
சிவகங்கைச் சீமையிலே
சொத்தெங்கள் துரையென, சிங்க மெனப்புடை
சூழ்ந்துல கழைத்திடவே
சுத்த மறக்குல நித்திய விளக்கெனும்
துரைசிங்க மன்னவரின்
சத்தியப் பெயரினில் முத்தொளி நினைவினில்
தழைத்திடும் கல்லூரி
சமத்துவத் தத்துவம் நிலைத்திட நிறுவினர்
சண்முக ராசாவே!

ரதகஜ துரகப தாதிகள் எனவரும்
நாற்படை சேர்த்த வரும்,
நடமிடு மயிலென மடம்படு நடைபயில்
நளினங்கள் பார்த்தவரும்,
கதவடை அரண்மனை விதியெனப் படும்அதி
காரத்தில் மூத்தவரும்,
காப்பவர்க்(கு) அனைவரும் காற்படு செருப்பெனும்
காத்தவ ராயன்களும்,
இதய மிருந்ததைப் பதியமி டாதபொன்
இருமுடி அரசர்களும்,
இருந்த இடந்தெரி யாதவ ராய்அடி
யோடு முடிந்திடவும்,
சதமெனப் பணிமுறை நிதமெனப் புதுமையின்
சார்பினில் கல்லூரி
சாட்சி உரைத்திட ஆட்சி புரிந்தவர்
சண்முக மன்னவரே!

(வேறு)

கல்விக் கோயில் கட்டு வித்தார் ;
கண்கள் யார்க்கும் ஒட்டிவைத்தார் ;
எல்லை இல்லாப் பள்ளிகளை
ஈன்ருர் ; வளர்த்தார் பிள்ளைகளை ;
செல்வம் சேர்த்த எல்லோரும்
செத்தார் ; பின்னர்ச் செலவிட்டார் ;
வெல்லத் தமிழ்நம் மன்னவரோ
விதியை வென்ருர், பதிவாளுர் !

கடலைக் கடந்தே ஓடிடினும்
கணக்காய்ச் செல்வம் தேடென்பார் ;
குடலைப் பூவாய்க் கிடக்காமல்
கொள்கைப் பூ,வாய் நம் அரசர்
விடலைத் தேங்காய் போல்விரைந்து
விரும்பிக் கற்ருர் இலங்கையிலே !
அடடா என்மேல் அவர்க்கிருந்த
அசைக்க முடியா அன்பென்னே !

பலவாம் துறையில் கல்விநலம்
பரக்கக் காணும் பான்மையினுல்
நலமாம் ஒருமைச் சமுதாய
நாட்டுக் கல்வித் தேட்டமுடன்,
குலமா யோங்கும் உலகறிவுக்
கூட்டுப் பண்பில் உலகமெலாம்
உலவி வந்தார்; இவரும் ஓர்
உலகம் சுற்றிய வாலிபரே!

தீண்டா மையாய்த் திரிந்தவெறும்
தீண்டா மையைச் சிமையிலே
வேண்டா மையா இருக்கும் அது
வேண்டாம் ஐயா எனக்காந்தி
ஆண்டார் ஆகிக் கோயில்நுழைந்(து)
ஆண்டான் அடியார் தொழவே, கை
யாண்டார்; ஒருமைக் கல்வியினுல்
ஆண்டார், அவர்தாம் ஆண்டவரே!

---

(வேறு)

தந்தையோ திருக்கோயில் நுழைவினல் சமுதாயச்
சமத்துவக் கல்வி ஆட்சி
தாங்கினர் ; தனையரோ, 'எம்மதமும் சம்மதத்'
தத்துவப் பெயர்விளங்க
வந்துளார் ; மக்களாம் மாபெரும் கடலிலே
மனமொன்றி மூழ்கி நின்று
வரலாறு மாற்றியே தமிழினில் அருச்சனை
வருமாறு தந்த அப்பர் ;
செந்தமிழ்ப் பற்றிலே அதிகனர் சிந்தைபோல்
சித்தவைத் தியசாலைகள்
திறந்துவைத் திட்டஓர் தமிழ்ப்பணி மருத்துவர் ;
திறமான பேச்சில் அரனை
முந்திய நக்கீரர் ; மூண்டிடும் வேட்டையில்
முற்றிலும் கட்டபொம்மன் ;
முற்போக்குக் கொள்கையில் கல்லூரி காத்திடும்
முதன்மைக்குக் கார்த்தி கேயர் !

................................................................................

திருப்பணிக் கல்லூரிச் செயலராய் மன்னரின்
செயல் வீர மாமனுராய்த்
திகழினும் ' மாப்பிள்ளை துரை 'யாய் உலாவரும்
திருவாள ரான துரையார்,
பெரும்பணிப் பொறுப்பினில் பெருவுடை யார்கோவில்
பெற்றரா சேந்தி ரன்போல்
பேறுடைய துரை ; கல்விச் சீருடைய துரை; கடமை
பேணஅஞ் சாத துரையாம் !
அருமணி, அன்புமணி, விலங்கியற் கலைமணி,
அறிவியற் செல்வ மணியே ;
ஆக்கத்தின் கண்மணி, ஆராய்ச்சி மணி, நிறை
அன்புமா ணவமணிகளின்
குருமணி, ஒருமணி, தஞ்சாவூர் நெல்மணி
குடும்பமொன் றாக நமையே
கூட்டுமணிக் கல்லூரி நீட்டுமணி ஓசையில்
குரல்கொடுப் பார்மன்னரே !

‘ நிறுவுநர் நினைவுநாள் ’ துரைசிங்க மன்னவர்
நெடுந்தவம் இருந்துபெற்ற
நிறைமனச் செம்மலாம் அரசர்சண் முகவள்ளல்
நினைவைத் துதிக்கும் நன்னாள்
பெறலரும் பேருக உருவான கல்லூரி
பெருமையாய் மார்பு தட்டிப்
பெருமன்னர் பேர்சொல்லு வேனென்று பேசிடும் ;
பீடுபெறு மாணவர்கள்
நெறியாகக் கற்கின்ற ஒவ்வோ ரெழுத்திலும்,
நெருங்குமொவ் வோர்வரியிலும்,
நெஞ்சார்ந்த கருத்திலும், நிற்கிறார் மன்னவர் ;
நிறைகிறார் ; ஆதலாலே
முறையான இந்தநாள் உரிமைநாள், ஒருமைநாள்,
முழுமைநாள், நிறைவுநாளே !
முறைகாணும் கருத்தினில் முடிக்கிறேன் ; ஆயினும்
முடிவிலேன் விடைபெறுவனே !



# வீரம்

முருகு சுந்தரம் எம். ஏ.

# அறிமுகம்

*முருகு சுந்தரம் : முத்தமிழ் அன்னையை*
*மூளும் அன்புடன் நாளும் வணங்கியே*
*உருகு சுந்தரம் ; உலகு தழைத்திட*
*உணர்வு மிக்க பலப்பல பாடலாய்ப்*
*பெருகு சுந்தரம் ; பேர்பெற எண்ணுவார்*
*பேறு வீரப் பெருமைகள் பேசிட*
*வருக சுந்தரம் ! வாய்மலர்ந் தேஇவர்*
*வழங்கு பாடல்கள் யாவும் தரம் ! தரம் !*

# வீரம்

முருகு சுந்தரம்

மன்னர் துரைசிங்க
மாமணியின் நினைவாக
இந்நகரில் கல்லூரி
எடுத்தபெரு மன்னருக்கு
நினைவுநாள் கொண்டாடும்
நேயர்களே ! விழாப்பெருமை
பார்த்து மகிழ்ந்து
பணைத்தோள்கள் பூரிக்கும்
கார்த்தி கேயக்
காவலனே ! தென்பாண்டிக்
கன்னல்தா லாட்டுக்*
கவிதை தொகுத்ததமிழ்
அண்ணலே ! மற்றுமுள்ள
ஆன்றோரே ! மாணவர்காள் !
கண்டு நிகர் தமிழால்
காவலனின் பெரியபுகழ்
மண்டபத்தின் சிற்பத்தூண்
வரிசைகளை நிறுத்திப்
பாட்டுச் சலவைக்கல்
பதிக்கவந்த பாவலரே !

* தாலாட்டு — கவிஞர் தமிழண்ணல் தொகுத்த தலை சிறந்த நாட்டுப் பாடல் இலக்கியம்.

இறந்து பிறந்தாலும்
இளங்குழந்தை நல்லுடலை
அரிந்து விழுப்புண்ணோ(டு)
அடக்கமன்று செய்துவந்த
மறக்குலத்து மாமன்னர்
மணிமுடியோ டரசாண்ட
தென்பாண்டிச் சிவகங்கைச்
சீமையிது ; அந்நாளில்
கொற்றம் இழந்து
குடைகவிழ்ந்த சேதுபதி
கொற்றத்தை மீட்டுக்
கொடுத்தபுகழ் மண்ணிதுவே !
முற்றிய பெரும்புகழை
முன்வைத் தரசாண்ட
வெற்றிக் கௌரி
வல்லபர்கள் நாடிதுவே !
நாலுகோட் டைப்புகழை
நங்கையர்க்கும் பகிர்ந்தளித்த
வேலுநாச்சி யார்பிறந்த
வீரமண் இம்மண்ணே !

உடையவர் என்ருல்
உலகத்தில் இந்நாளில்
மண்ணுடையார், பொன்னுடையார்,
மதிபோலப் பக்கத்தில்
பெண்ணுடையார் என்றுபல
பேசுவார் ; சிவகங்கைப்
பெரிய உடையவரின்
பெருமைகளைப் பேசுங்கால்
வீரம் உடையார் ;
விழுப்புண் மார்புடையார் ;
ஆரெதிர்த்து வந்தாலும்
அகமுடையார் ; கையினிலே
வாளுடையார் ; வேலுடையார் ;
வழங்கும் கொடையுடையார் ;
தாளடைந்த பகைவர்க்கும்
தஞ்சம்உடை யார்என்று
சேது பதிக்கிழவன்
செப்பிய சிறப்புடையார்.

பசிவர்ணம் அறியாமல்
பார்மக்க ளைக்காத்த
சசிவர்ணத் தேவரின்
தடந்தோள் வரலாற்றைப்
பொன்னெழுத்தி லேபொறித்துப்
பொதிந்துவைத்துப் போற்றலாம்.
ஆய குலமகளிர்
அந்நாளில் தமையெதிர்த்துப்
பாயவரும் கொல்லேற்றைப்
பார்த்தஞ்சும் ஆடவனை
எச்சிற் புழுவாய்
எண்ணுவாள் ; இகழ்ந்துரைப்பாள் ;
கொம்புக் கஞ்சாத
கோமகனை ஆயர்குலக்
கொம்பு விரும்பிக்
கூடி மகிழ்ந்திருப்பாள்.
வேறு தழுவ
விரும்பாமல், கொல்லவரும்
ஏறு தழுவுவதே
எந்தமிழர் விளையாட்டு.

---

துள்ளி வருங்காளைத்
துடுக்குத் தனமடக்கி
நல்லவர் உயிர்காத்தார்
நமது சசிவர்ணர்.
நெருப்புக்கண் வரிப்புலியை
நேர்நின்று வெறுங்கையால்
நொறுக்கினர் தஞ்சையிலே ;
குறிக்கோளில் வெற்றிபெற்றூர்.
சிவகங்கைச் சீமைச்
சிங்கா தனமவரைத்
தாங்கி மிகப்பெரிய
தகுதியினைப் பெற்றதன்று.

பண்ணின் துறையறிந்து
பாடிவந்த பாணருக்கு
மன்னர் துரைசிங்கம்
மகிழ்ந்தளித்த பரிசிலையும்
வயிற்றுப் பசிபோக்கி
வாழவைத்து, ஏழையரைப்
பயிற்றிக் கரையேற்றிப்
பண்புடனே இருப்பதற்கு

ஏழைமா ணவரில்லம்
எடுத்த அறத்தினையும்
சிவகங்கை நன்கறியும் ;
சீமையெல்லாம் நன்கறியும்.
நீதி கொடைவீரம்
நிகரற்ற பெரும்புலமை
ஆதி முதல்பெற்ற
அரசர் குடியினிலே
இன்முகத் தோன்றல்
சண்முகனர் அவதரித்தார்.
வேழம் விளையாடும்
ஈழத்தில், சிவகங்கை
வேழம் கலைபயின்று
விளையாடி மீண்டதிங்கே.
கழையாடும் குரங்கைப்போல்
காட்சிதந்த வெள்ளையர்க்குத்
தலையாட்டும் மன்னர்
பலரிருந்தார் : அந்நாளில்
விளையாட்டு மன்னராய்
விளங்கியவர் சண்முகனர்.

சாதிக் கறைதமிழர்
சரித்திரத்தில் பெரியகறை !

அந்தக் கறையை
அகற்றுதற்குப் புதுக்கோட்டைச்
சொந்தத்தைப் பெற்ருர்
சூழ்ந்த எதிர்ப்பிடையே!
கரும்புச் சுவைக்கும்
கணுத்தடைகள் பலவுண்டு.
காவிரிப் பெருக்கைக்
கல்லணை தடுப்பதுண்டு.
காதலுக் கேதுதடை ?
கைவைத்து எரிமலையை
ஊதியணைக்க
ஊரார் முயற்சிசெய்தால்
குமுறி வெடிப்பதன்றி
அமைதி பெறுவதுண்டோ ?
புலியோடு போராடும்
போர்மறவர், சாதியெனும்
எலியோடு வதைக்கண்டா
எண்ணம் கலங்கிடுவார் ?
வீரத்தால் காதலில்
வெற்றிபெற்றுப் பூங்கோதை
ஆரத்தை அன்றுபெற்ருர்
அரசர்சண் முகராசா.

அந்தநாள் தமிழ்நாட்டை
ஆண்டபெரு மன்னர்களுள்
இந்தமா நிலம்சுற்றி
எவர்வந்தார்? மிகச்சிலரே!
பூநாடும் வண்டைப்போல்
புதல்வர் மனைவியுடன்
மேல்நாடும் கீழ்நாடும்
மெச்ச வலம்வந்தார்.
தாங்கண்ட நாடுகளில்
தழைத்துவளர் கல்வியுடன்
அறிவியல் சமதருமம்
பெருகிய நிலைகண்டார்.

ஒன்றே குலமும்
ஒருவனே தேவனென்று
அன்று தமிழ்ப்புலவர்
அறிந்தெடுத்துச் சொன்னதெல்லாம்
நம்நாட்டை விட்டு
நானிலத்தில் பரவுவதைக்

கண்டு மனங்கசிந்தார்.
கங்கைக்குத் திரும்பியதும்
தீண்டாமை நாட்டுக்கு
வேண்டாமை என்றுசொன்னார்.
போர்க்களத்தி லேபொருது
புதுப்புண்கள் மார்பிலுற
ஆர்த்து வருவதுதான்
அந்நாளில் பெருவீரம்.
போரை ஒழித்தமைதி
பூணுகின்ற இந்நாளில்
பாரில் மடமையைப்
பகைத்தழித்தல் வீரமன்றோ ?
தாளுதைத்துப் பெருங்குதிரை
தாம்செலுத்து மன்னவர்தம்
ஆளுகைக் குட்பட்ட
ஆலயங் களுக்குள்ளே
ஏழை அரிசனங்கள்
எல்லாம் தொழுதுவரச்
சட்டம் கொணர்ந்து
சமதரும வித்திட்டார் !

---

பண்டைக் குலவொழுக்கம்
பாழென் றெதிர்த்தவரைக்
கண்டு சிரித்தார் ;
காலநதிப் போக்கிலிலே
செல்லத் துணியாதார்
பேரழிவர் என்றுசொன்னார்.

தந்தை பெயரால்
தக்கஅறம் செய்வதற்கு
இந்தத் தமிழ்நாட்டார்
எத்தனையோ வழிசொல்வார்.
கோயில் எடுப்பார் ;
கோபுரங்கள் நாட்டிடுவர்;
ஆயிரம் அந்தணர்க்கு
ஆக்கள் பரிசளிப்பார்;
சலவைக்கல் மண்டபங்கள்
சமைப்பார் ; தெருத்தோறும்
சிலைவைப்பார்; பூசைக்குச்
செந்நெல் வயல்கொடுப்பார் ;

நந்தா விளக்கெடுக்க
நன்செய் நிலமளிப்பார்.
இந்த அறங்களால்
என்னபயன் நாட்டார்க்கு?
நந்தா விளக்கெடுத்தால்
நாட்டுமக்கள் அறியாமை
சிந்துமா? அறிவில்லார்
சிந்தை ஒளிபெறுமா?
சலவைக்கல் மண்டபத்தில்
சயனசுகம் காண்பதன்றி
பலகலைகள் மிகப்பெருகிப்
படிப்பறிவு வளர்வதுண்டா?
நாலா யிரங்கோயில்
நாட்டுவதைக் காட்டிலுமோர்
ஏழைக்குப் படிப்பறிவை
ஏற்றுவதே அறமென்று
பாரதியார் சொன்ன
பக்குவத்தை அறியோமா?
ஆகையினால் அன்றோ
அரசர்சண் முகராசா

முகவை நிலமெச்ச
முனைந்தெடுத்தார் கல்லூரி !

மறக்குலத்துச் செல்வங்கள்
மற்றவ ருடன்கூடிச்
சிறக்கக் கலைகற்றுச்
சீர்த்திமிகப் பெறுகின்றார்.
மறக்கட் டளைப்போரால்
மன்னர்பெறும் வெற்றியிந்த
அறக்கட் டளைக்கொப்போ?
அன்றோர் நாள் இம்மண்ணில்
மருது விளைத்த
மாவீரம் நிலைப்பதுபோல்
கருதிப் பெருங்கொடையால்
கட்டிவைத்த கல்லூரி
கௌரிவல்ல பர்புகழைக்
காசினிக்கு முரசறையும்.
சண்முக ராசா
சாகவில்லை; இவ்விடத்தில்
இன்முகத்தோ டிருக்கின்றார்;
என்றும் நிலைத்திருப்பார்.



# மன்னர் நினைவில்...

மீ. இராசேந்திரன், எம். ஏ.

## அறிமுகம்

ஒரு தூண் அமைக்கத் திட்டமிட்டுக்
கருங்கல் மாமண்டபம் அல்லவா எழுப்பியுள்ளார் இச்சிற்பி!
இரங்கற்பாப் புனைவதற்குக் கோலெடுத்துப்
பெருங்காவியம் அல்லவா படைத்துள்ளார் இக்கவிஞர் கோ!
வங்கக் கடலோரம் உறங்கும்
காஞ்சித் தலைவனின் இதயங்கவர்ந்த கவிஞரின்
இப்பாட்டுக் கேட்டு,
எங்கள் கல்லூரி வாயில்முன்
பூந்தோட்டத்தில் துயிலும் காவலன்
கண் விழித்தாலும் வியப்பில்லை!
எப்புலவனாலுமே — இனி
இப்புலவனாலுமே
இப்படிப்பட்ட பாமாலையை யாருக்குச் சூட்ட முடியும்?
ஒப்பாரி வைக்கும் நம் நாட்டில்
இப்பாவலர் சாவை
எப்படிச் சாடியிருக்கிறார்!
நூறாண்டு
பல நூறாண்டு வாழ்க கவிஞனே!
நானோ — இனி
ஒரு வினாடிக்குமேல் வாழ விரும்பவில்லை.
நூறு முறை சாகத் தயாரய்யா!
என் நினைவில் இதுபோல்
ஒரு பாட்டினைப் புனைந்துவிடு.
அது போதும்.

— சிவகங்கை மன்னர்
து. ச. கார்த்திகேய வேங்கடாசலபதி ராசா

# மன்னர் நினைவில்...*



மீ. இராசேந்திரன்

இருந்தாலும் இதுகொடுமை! கொடுமை! சாவே!
இரக்கமற்ற செய்கை உன் செய்கை! எந்த
மருந்தாலும் தீராத நோயை நெஞ்சில்
வளரவிட்டாய்; விளம்பரமோகத்தில் மூழ்கி
விருந்தாலும் விழாவாலும் வெளிச்சம் போடும்
'வேடிக்கை மனிதர்கள்' எல்லாம் இங்கே
இருந்தாலும் இறந்தாலும் ஒன்று தானே;
இலைவைத்தாய்; மலர்சிதைத்தாய்; கொடுமை, ஐயோ!

---

* வள்ளல் பெருந்தகை சண்முக மன்னர் மறைந்த ஓராண்டுக்குப்பின் இயற்றப்பட்ட இக்கையறுநிலைக் கவிதை பன்முறை அச்சேறிப் பாநலன் பாராட்டுவோர் சிந்தையெல்லாம் குடியேறியிருக்கிறது. சிவகங்கை மன்னரின் விருப்பத்திற்கிணங்க இத்தொகுதியிலும் இடம்பெறுகிறது.

உன்னை நான் பழிக்கின்றேன் என்று சாவே
ஒரு போதும் கருதாதே! கேட்டிருந்தால்
என்னை நான் கொடுத்திருப்பேன்! அதனை விட்டே
ஏன் அந்தத் தேன் உயிரைப் பறித்தாய்? ஓ! ஓ!
மன்னர்தான் கொடுப்பதற்கு முடியும் என்று
மறக்காமல் அவர்வாழ்ந்த மனைபுகுந்து
பொன்னைப்போல் பொருளைப்போல் ஆவி வாங்கிப்
புறப்பட்டுப் போனாயோ? சாவே சொல்! சொல்!

ஏராண்டு வாளாண்டு செழித்திருக்கும்
இசைச்சீமை சிவகங்கைச் சீமை என்னும்
பாராண்டு கொண்டிருந்த வேந்தை நீயோ
பரிசாகப் பெற்றுவிட்டாய்; எங்களுக்கோ
நீராண்டு கொண்டிருக்கும் விழியும், துன்ப
நெருப்பாண்டு கொண்டிருக்கும் நெஞ்சும் தந்தாய்;
ஓராண்டு முடிந்தாலுங் கூட, சாவே
உன்கொடிய பரிசையாம் இழக்கவில்லை!

பாரிஉயிர் கவர்ந்துசென்ற வேளை அந்தப்
பறம்பரசன் இளமகளிர் கண்ணீர் மையில்
தூரிகையைத் தொட்டெழுதி வைத்துச் சென்ற
துயர்ப்படத்தைக் கண்டிருப்பாய்; இல்லை யாசொல்?
கூரியகண் உனக்குண்டே கண்டிருப்பாய்;
கொடுமையினை ஏன்தொடர்ந்தாய் கண்ட பின்னும்?
மாரியுடன் போட்டியிடும் எவரையும்நீ
மாய்த்துவிடு வாய்போலும் விரைவில் சாவே!

உங்களுக்குக் கிடைத்திருக்கும் தலைவன் ஏனோ
ஓயாமல் தேய்கின்றான்; பாவம்! ஆனால்
எங்களுக்குக் கிடைத்திருக்கும் தலைவர் மட்டும்
எப்போதும் வளர்கின்றார் என்று நாங்கள்
கங்குலிலே முகங்காட்டும் மீன்இனத்தைக்
கண்டுநகை புரிந்ததனால் வெகுண்டாய் போலும்!
திங்களுக்குப் பெருமைதர நினைத்தாய் போலும்!
திட்டமிட்டு நல்லுயிரைப் பறித்து விட்டாய்!

.........................................................................................................................................

பட்ட மரம் வெட்டுண்டால் பரவா யில்லை ;
பாதத்தில் தைக்கின்ற முள்வ ளர்க்கும்
நெட்டைமரம் வீழ்ந்திட்டால் கவலை யில்லை ;
நிழல் நாடி நிற்போர்க்கு மயக்கம் நல்கும்
கெட்டமரம்-நச்சுமரம் நிலத்தில் வெட்டிக்
கிடந்திட்டால் வருத்தமில்லை ; ஆனல் உன்னை
தொட்டமரம் நல்லமரம் – கனிப முத்துத்
தொங்கிக்கொண் டிருந்தமரம் ; வீழ்த்த லாமா ?

மண்ணாசை உடையவர்மேல் — பொறுமை என்னும்
மண்ணாசை உடையவர்மேல் ஆசை வைத்தாய் ;
பெண்ணாசை உடையவர்மேல் — கல்வி என்னும்
பெண்ணாசை உடையவர்மேல் ஆசை வைத்தாய் ;
பொன்னாசை உடையவர்மேல் — தூய்மை என்னும்
பொன்னாசை உடையவர்மேல் ஆசை வைத்தாய் ;
உன்னாசை பேராசை ! எங்கள் வாழ்வின்
ஓராசை யைப்பிரித்தாய் ; கொடுமை, ஐயோ !

..........................................................................................................

கொடைகாண வேண்டுமென்றும் அருளைச் சிந்தும்
குளிர்ந்தவிழி தனைக்காண வேண்டு மென்றும்,
நடைகாண வேண்டுமென்றும் இதழ்கள் சிந்தும்
நகைகாண வேண்டுமென்றும் உடல்உ டுத்தும்
உடைகாண வேண்டுமென்றும் தமிழ்மு கத்தின்
ஒளிகாண வேண்டுமென்றும் புகழ்தல் கேட்டுத்
தடைகாண நினைத்தாயோ அவர்க்கு நீதான்?
தற்பெருமை தேடுகின்ற சாவே, சொல்! சொல்!

இல்லாதார் இயலாதார் பசியைப் போக்க
எத்தனையோ சத்திரங்கள் கட்டு வித்தார்;
எல்லாரும் இன்புற்றே இருக்கும் வண்ணம்
எத்தனையோ கலைக்கூடம் கட்டு வித்தார்;
கல்லார்உள் ளார்இந்த நாட்டில் என்னும்
கறைநீங்க ஒளி ஓங்கப் பள்ளி யோடு
கல்லூரி கட்டுவித்தார்; அவர்க்கு நாங்கள்
கல்லறையைக் கட்டுவிக்க லாமா, கூறு?

..........................................................................................................................................................................

வாடிப்போய்க் கிடக்கின்ற செடிகளைப்பார்;
வதங்கிப்போய்க் கிடக்கின்ற கொடிகளைப்பார்;
ஆடிப்போய் நின்(று) அவர்முன் மகிழ்ச்சி தந்த
அழகுமயில் சிலைமயிலாய் ஆனதைப்பார்;
ஓடிப்போய் அவர்முன்னர் கூவிக் கூவி
உளங்கவர்ந்த குயில்ஊமை ஆனதைப்பார்;
பாடிப்போய்க் காட்டுதற்குத் தலைவர் இன்றிப்
பரிதவிக்கும் என்னை இதோ பார் பார் சாவே!

சிறுவயதில் மன்னருடல் பேணிக் காத்த
செவிலித்தாய் துடிக்கின்றாள்; அதோபார் சாவே!
சிறுவயதில் கூடிமகிழ்ந் திருந்த தோழர்
சிந்தைநொந் தழுகின்றார்; அதோபார் சாவே!
சிறுவயதில் கல்விதந்த ஆசான் இன்று
செயலிழந்து தவிக்கின்றார்! அந்தோ! சின்னஞ்
சிறுவயதில் குஞ்சுகளை விட்டு விட்டுச்
சிறகடிக்கச் செய்துவிட்டாய்! முறையா கூறு?

---

கல்யாண மாலைகட்டித் தந்தோன் இன்று
கல்லறைக்கு மாலைகட்டக் கலங்கு கின்றான் ;
கல்யாணப் பாட்டிசைத்த பாணன் இன்று
கல்லறைக்குப் பக்கத்தில் புலம்பு கின்றான் ;
கல்யாணப் படமெடுத்த கலைஞன் இன்று
கல்லறையை நோக்கிக் கை நடுங்கு கின்றான் ;
கல்யாண ஊர்வலத்தைக் கண்டா ரெல்லாம்
கண்ணீர்ஊர் வலங்காண வைத்தாய், சாவே !

நீவருதல் கூடாதென் றுரைக்க வில்லை ;
நேர்மையுடன் மெதுவாக மந்தை விட்டே
ஆ-வருதல் போல் வந்தால் வரவேற் போமே !
அநியாய மாய்நகரை அழிக்கப் பாயும்
தீ-வருதல் போல் வந்தாய் ; இரக்க மின்றிச்
சீறிவரும் புயல் போல வந்தாய் சாவே !
நீ வருதல் முதுமையிலே என்றால் நன்று ;
நெருங்கி வந்தாய் இளமையிலே ; நன்றா கூறு ?

ஈராயி ரம் ஆண்டுத் தமிழ கத்தின்
இலக்கியங்கள் சித்திரித்துக் காட்டு கின்ற
ஓராயி ரம்மன்னர் உயிர்கு டித்தாய் ;
ஒரு கதிர்போல் ஒருமன்னர் இருந்தார் ; நன்ருய்
ஆராயா மல்அவரைக் கொன்று விட்டாய் ;
ஆத்திரம்நீ அடைந்தாலும் அச்சம் இல்லை ;
பேராயி ரம் உள்ள அவையில், நீதி
பிறழ்ந்துவிட்டாய் நீ என்பேன் இனிமேல் சாவே!

மானுடத்தை அழிப்பதென்றன் வேலை என்று
மனப்பால்நீ குடிக்காதே! வேண்டு மானல்
ஊனுடலை அழித்திடலாம் ; உடல்இ யக்கும்
உயிர்மூச்சை நிறுத்திடலாம் ; ஆனல் என்றும்
வானுலகு வரைபரவும் பெருமை நீரை
வற்றவைக்க முடியாது ! கருணை மன்னர்
தேன்புகழைக் கீர்த்தியினைச் சாவே, உன்னல்
தீண்டிவிட முடியாது தெரிந்துகொள் நீ!